உ

சிவமயம்.

# பரிபாஷைத்திரட்டு.

அகத்தியமுனிவர்

அருளிச்செய்தது




இஃது

ஆறுமுகதேசிகரால்

பார்வையிடப்பட்டு. ௧௰௭


ஆதிபுரி.

இரத்தினவேலுமுதலியாரது

வாணீவிலாஸ அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1898

சென்னை பெத்துநாயக்கன்பேட்டை

நாராயணமுதலிவீதி (52) வது நெம்பர் வீடு.

உ

கடவுள் துணை.

# விளம்பரம்.

இதனால் சகலமானவர்களுக்குந் தெரியப்படுத்துவது யாதெனில் சென்னை பெத்துநாய்க்கன்பேட்டை நாராயணமுதலி வீதி (52)-வது கதவிலக்கமுள்ள வீட்டில் ஸ்தாபித்திருக்கும் வாணிவிலாஸ அச்சுக்கூடத்தில் நானாவித பெரியபுஸ்தகங்களும் நூதனமாய் இபபோது அச்சிட்டிருக்கும் இந்துபால வைத்திய போதினி மனோரஞ்சித நாடகம் பழனியாண்டவர் பவனிவிலாசக்கும்மி இன்னும் மநேகவித புஸ்தகங்களும் அச்சிட்டிருக்கிறபடியால் வேண்டியவர்கள் ௸ அச்சுக்கூடத்தில் விலை சரசமாய்ப் பெற்றுக்கொள்ளலாம்.

| | | | |
|---|---|---|---|
| அராபிக்கதை படத்துடன் ... ... ... | 2 | 0 | 0 |
| ௸ நல்ல கிளேஸ்கடிதம் ... ... ... | 2 | 8 | 0 |
| ஸ்கந்தபுராணவசனம் படத்துடன் ... ... | 2 | 8 | 0 |
| பாகவதவசனம் ... ... ... ... ... | 1 | 8 | 0 |
| ௸ திக்குகடிதம் ... ... ... ... | 2 | 8 | 0 |
| ௸ கிளேஸ்கடிதம் ... ... ... ... | 3 | 0 | 0 |
| அகஸ்தியர் தேவாரத்திரட்டு திருவாசகம் திருவிசைப்பா திருப்பல்லாண்டு பெரியபுராணச் செய்யுட்டிரட்டும் படத்துடன் நல்ல கிளேஸ்கடிதத்தில் திருத்தமான பதிப்பு | 1 | 8 | 0 |
| அகஸ்தியர் வாதகாவியம் 1000 ... ... | 1 | 0 | 0 |
| பூநமுனி பெருநூல் வைத்தியகாவியம் ... | 1 | 0 | 0 |
| அகஸ்தியர் நாலுகாண்டஞானம்... ... ... | 0 | 12 | 0 |
| ௸ நல்ல கிளேஸ்கடிதம்... ... ... | 1 | 4 | 0 |
| அகஸ்தியர் வைத்தியசெல்லறைக்கோர்வை ... | 0 | 14 | 0 |
| அகஸ்தியர் வாதசௌமியம்... ... ... | 0 | 12 | 0 |
| திருவாதவூரர் புராணம் படத்துடன் நல்ல கிளேஸ்கடிதம் திருத்தமானபதிப்பு | 0 | 12 | 0 |
| ஹிந்துபாலவைத்தியபோதினி... ... ... | 0 | 10 | 0 |
| வி-பி. போஸ்டேசார்ச்சு ... ... ... | 0 | 3 | 0 |
| சந்திரகாச. ... ... ... ... | 0 | 10 | 0 |
| திருவாசகம் கிளேஸ்கடிதம் படத்துடன் ... | 0 | 8 | 0 |
| மனோரஞ்சித நாடகம ... ... ... | 0 | 6 | 0 |
| பூசாலி பாட்டு ... ... ... ... | 0 | 4 | 0 |
| பழனியாண்டவர்பவனிவிலாசக்கும்மி ... ... | 0 | 2 | 0 |
| பரமபதசோபானபடம் கிளேஸ்கடிதம்... ... | 0 | 1 | 0 |

இப்படிக்கு

☞ ஆ. இரத்தினவேலுமுதலியார்.

உ

கணபதி துணை.

# அகத்தியமுனிவர்

அருளிச்செய்த

# பரிபாஷைத்திரட்டு.

## முதற்காண்டம்.

### காப்பு.

பரமஞானே தயத்துப் பரஞ்சுட ருலகுக்கெல்லாம்
திரமதா வுதித்த ஞான திவாகரன் றிருத்தாள் காப்பு
வரமதாம்வகாரயோக மறைப்புறூற் பாடையெல்லாம்
முருகவிழ்தமிழாற்செய்ய முருகனைங்கரர்தாள்காப்பே.

### பாயிரம்.

காப்பென வுரைததவாதக் கணக்கொரு லட்சந்தன்னைச்
சேர்த்தது பாதியாகத் திரட்டியே நூலையெல்லாம்
நாற்பத்து மூன்றுமொன்று நடத்திய காண்டந்தன்னைப்
பார்த்திடி னேந்நூருகப் பாடைநூல் படித்திட்டானே (க)

படிக்குமிந் நூலுக்கொப்பாம் பராபர மொன்றேயல்லால்
மடத்தினி லுள்ளசித்தர் வாதநூ லிதற்கொவ்வாது
குடத்தினிற் றீபம்போலுங் கூறுநற் சித்தர்பாடை
திடத்தபொன் மேருவுச்சித் தீபமா மிந்நூலன்றே (உ)

இந்தநூ லிந்துகாண்டத் தியம்பிய கருவேதென்றால்
சந்தேகந் தீர்க்கவேண்டித் தமிழ்க்கவி யைந்நூற்றுக்குள்
மந்திர வாதயோக மணிபஞ்சி கரணமார்க்கம்
சிந்தைசெய் வகாரபாடை தீட்சையுஞ் செப்புமாதோ (௩)

## நூல்—வேறு.

செப்பியதோர் வகையென்ன நூலின்மேலாந் - தீட்சைபொடு வைபாகஞ் சேர்மானங்கள், தப்பிலாக்குருமுடிக்குங் கருமானங்கள்- தத்துவபஞ் சீகரணந் தாக்கோக்கும், ஒப்புவமையில்லாத மவுனக் கூறே - டுறுதியுள்ள வட்டாங்க யோகக்கூறு, மெய்ப்புடைய காய கற்ப சமாதிக்கூறு - வெறியேறியோடுமணி மேதைக்கூறே. (௪)

கூறான காலங்க ளிடைபாகங்கள் - குருசீட பக்குவங்கள் பிர மாணங்கள், பேறான சித்தியிலே யிருபத்தைஞ்சும்-பிரபலமா னான் மறைவுச் சந்தேகங்கள், நேராக வெளியிட்டுச் சொன்னவாறு - னி கண்டெனவுஞ் சித்தரினத நினைவுள்வைத்தார், ஆறுறுமறுநூறுங் கற்பநூறு - மாயிரமு முந்நூறு மடக்கஞ்செய்யே. (௫)

அடக்கமுள்ள சூத்திரங்க ளின்னுங்கேளு - வாயிரத்தோடிரு நூறைந் நூற்றின்மேலொன், றுடலுக்குளுயிர்முப்பத் தொன்றெ ண்பத்தொன்-றுற்றபதி னொன்று நானூற்றொன்று, கோதறுசீர் மதிவெண்பாக் கவிதைநூறு - குருநூலைம் பதுமதுவோர் கோவை யாகக், கிடைப்பதிலே பூர்வதவப் பயனாலெய்துங் - கிடைத்திடினிந் நூல்பதனைக் கெதிகொள்வோர்க்கே. (௬)

கெதியறியாப் பாவிகட்கிந் நூல்கிட்டாது - கிருபையுள்ள ஞா னிகட்கே யெய்துமெய்தும், பதியறியு நன்மவுன யோகிகட்கே- பரி சுத்த நூலிதுதான் பதனம்பண்ணும், விதியிலேயென் றெண்ணாதே நூலைத்தேடு - விண்டுவிண்டு பேசாதே வேண்டாம்வேண்டாம், நி திதருவா ரூபசார நீக்கிப்போடு - நினைவுகொண்டு சூத்திரத்தி னினை வைப்பாரோ. (௭)

நினைவிலே யிருப்பதொன்று சொல்வதொன்று - நெஞ்சிரக்க மில்லாத சித்தர்பாடை, கனவிலே கண்டபொருள் போலவப்பா-கா ட்டினார் சூத்திரத்திற் கபடமாக, அனலிலே கிருமிசெல்லா வாறு போல - வவர்தமொழிக் கெதிர்மொழிசொல் வாருமில்லை, பனியை நம்பி யுழுதவன்தன் கதையைப்போலப் பாடினார் மறைபொருளாப் பாடினாரே. (௮)

படுகின்ற சித்தர்தம நூல்களெல்லாம் பரிபாடை தெரியாத பாவியோர்க்குத் தேடுகின்ற பொருளழியச் சொன்னதல்லாற் - றி

னையளவு பொன்காணச் சொல்லவில்லை, வீடிழந்தமாடிழந்துள்ளசெம்பொன் - வேணதெல்லாந் தானிழந்து மெய்தோன்றுமல், காடுறைந்து போவதற்கோ பெரியோர்சொல்வார் காணமற் புதைத்தசொல்லைக் கண்டுதேறே. (௯)

கண்டுகண்டு தேறினவ ரநேகருண்டு - கருவறிந்து செய்தவர்க ளநேகருண்டு, தொண்டுசெய்து பெற்றவர்க ளநேகருண்டு - தொல்லையென்று விட்டவர்க ளநேகருண்டு, விண்டுசொலா தடங்கினவ ரநேகருண்டு - வீண்சரிசுட்டுத்திரிவா ரநேகருண்டு, பண்டுவிட்ட குறைகள்வந்து நேர்ந்ததானற் - பலிக்குமல்லால் வீணருக்குப் பாழதாமே. (௰)

பாழ்நெஞ்சு பெற்றகருமிகளெல்லாரும் பாரதனில் - ரசவாதமறிவோமென்று, நாளிலொருவர்க்கொருவ ருறவுகூடி - நலமில்லாச் சூத்திரங்க ளன்றுய்ப்பேசி, நீள்புவியி லெம்மையொப்பா ரொருவருண்டோ - நீரறிந்த வித்தைவெகு நேர்த்தியென்றுந், தாள்பெறுநற் கும்பகா மறிவோமென்றுஞ் - சாராயந் தனைக்குடித்துச் சண்ணுவாரே. (௰௧)

சண்ணினதே யல்லாமற் சூத்திரத்தின் - சமுசயங்க டாந்தெளிந்து சார்ந்தோரில்லை, எண்ணியெண்ணி யவரவர்க டமதுபுத்திக்- கேற்றபடி பார்த்தலைந் திடைவதல்லால், மண்ணிலெழு பிறப்பாரும் பிரமகற்பம் - வானைவிட்டுக் கீழிறங்குங் கற்சுண்ணம்பும், விண்ணவர்க்கு மருந்தான சாரைப்பாம்பும் - வெளியில்வெளி யானவர்க்கே விள்ளுந்தானே. (௰௨)

விள்ளுமே யாதியிலே யொளியுமாச்சு - வெந்தழலா மறுபிறப்பு நீலமாச்சு, கள்ளமதா யிறப்பிறப்புச் சிவப்புமாச்சு-காங்கைகொண்டு மறுபிறப்பு வெள்ளையாச்சு, துள்ளியது பின்பிறப்பு மஞ்சளாச்சு- தோகைமயி னிறமாச்சு மறுபிறப்பில், உள்ளபடி கடைசியெழு பிறப்பிற்றுனு - முயர்கோழி முட்டைநிறம் படிகமாச்சே, (௰௩)

படிகமென்ற வண்டமெல்லாம் பிரமகற்பம் - பார்க்கவென்றுலாகாசப் பிரமவிந்து, குடியிருக்கு மிடந்தானே பூமியாளுங் - கொண்டலினு லவதரித்த குருதானையா, அடியறிந்தா லதின்கீழே வானவன்னி யக்கருவைக் கண்டவனே யருள்மெய்ஞ்ஞானி, திடமான

ஞூபிறப்பாய் நின்றமூர்த்தி - சித்திரையின் வெண்சாரைச் செழுந் தண்ணீரே. (௰௪)

தண்ணீருஞ் சுண்ணாம்புந் தானேசேர்ந்தாற் - சகலசித்துங்கை வசமாய்த் தானேசிக்கும், மண்ணாடும் விண்ணாடு மொன்றுமானால்- வாதமடா வெளியாச்சு மாய்கைபோச்சு, பெண்ணாரும் புருடருமே சேர்ந்தாரானாற் - பிள்ளையொன்று பொன்போலே பிறக்கலாச்சு, கண்ணாரும் பிள்ளைபிதா சூரியன்றான் - கன்லிலே பிறந்தவனை காட்டினேனே. (௰௫)

காட்டினேன் சிருட்டிசெய்யப் பிரமனென்றுங் - கற்சுண்ணம் பிரமகெற்பக் கல்லாமென்றும், மூட்டினேன் மூலவிந்தயனேபூமி- மூச்சில்லை பேச்சில்லை மவுனத்தாயாங், கோட்டிகொள்ளு நான்முகத்தன் வயிற்றுக்குள்ளே - குடியிருந்தா லுருத்திரனு மாலுங்கூடி, ஆட்டுகிற வட்டெல்லாம் பிரமசித்தே - பவன்பிறப்புப் பூதவங்கிசத்தைத்தேனே. (௰௬)

அங்கிசத்தில் வந்ததுதான் மண்ணேயாச்சு - தப்பூதமொருமுளையக் குதிக்கலாச்சு, பக்கிட்ட வம்முளையே யிலைபூவாச்சு பருமலரே காய்பழமாம் விந்துமாச்சு, திங்களெனும் விந்ததுதான் ரசமுமாச்சு-தெளிந்தரசந் தானுமுருண்டுதிரமாச்சு, சங்கையில்லா துடலாச்சங் குயிருமாச்சு - தன்னுடலிற் சிவசெந்து கோடியாச்சே (௰௭)

கோடியென்று லெத்தனையென் றுரைப்பேனையா - சூர்ந்துபார் நாலுவித யோனிக்கூத்தை, ஆடிநின்ற மகாபூத வண்டவித்தா-லப்பனே பிறந்ததுகாண் பிண்டவித்துத், தேடிநின்றலைவானே னுனக்குள்ளேயே - செலக்குதித்தப் பனிநீர்போற் செயநீராச்சு, ஓடியவோர் பிரமகெற்பக் கற்சுண்ணாம்புக் - குயர்ந்தசிவ தீட்சையிந்தச் செயநீராமே. (௰௮)

செயநீருஞ் சுண்ணாம்புஞ் சேர்ந்துகொண்டாற் - சிவசிவாகுருவாச்ச சிவனுமாச்சு, மயமான முப்பூவென் றுரைத்தசெய்தி வகைதெரியச் சொல்லுதற்கென் வாய்கூசாதோ, தயவாக நானுரைத்தே னிச்சமட்டே - சமுசயங்கொரவென்றாற் கடைக்காண்டம்பார், உயிரிருக்கு மிடந்தானே பிரமகெற்ப - முடலிருக்கு மிடந்தானே பிண்டமிதே. (௰௯)

வித்துக்கு ளின்றரச மப்புமாச்சு - விண்ணிழிந்து வந்தரச முப்புமாச்சு, சத்தித்த விடங்களிலே யெல்லாமுண்டு - சாகாதகாருனே சவுக்காரந்தான், புத்திக்குந் தோன்றாதேற் புலத்தியாகேள் - பொருளாயிந்த ஞானமுடிவுக் கடைக்காண்டம்பார், இத்தைவிட்டு நூல்பாடை யாதிப்புப்புக் - கெடுத்தபரி பாடையெல்லா மியம்புவேனே. (௨௰)

இயம்புகிறேன் சித்தர்தம நூலின்பாடை - யிலக்குண்டோ கணக்குண்டோ ரசவாதத்தில், சுயமென்ற வுப்புக்குச் சித்தர்கூடிச் - சொன்னவொரு பாடையெல்லாஞ் சொல்வேன்மைந்தா, பயம்பிடிக்குஞ் சித்தர்கடங் கோபத்தாலே - பழிவருமென் றரன்மேலே பாரம்வைத்து, நயம்பெறவே சொல்லிவைத்தே னைந்நூற்றுள்ளே - நாதர்கடா மெனைக்கடிந்து நகைத்திட்டாரே. (௨௧)

நகைத்தவர்க ளாரென்றாற் புலத்தியாகேள் - நவநாத சித்தர்முதற் பதினெண்பேரும், செகத்திலுறு மால்கன்னகஞ் சட்டைசித்தர் - திருமூலவர்க்கமற்றச் சித்தரெல்லாம், பகைத்தெங்க ணூற்பாடைக் கருவையெல்லாம் - பாரதனிற் கோள்சொல்லப் பண்போவையா, அகத்தியமா முனியுனக்குத் தெரியாதோதா - னைந்நூறுங் குகைமறைவென் றருளினனே. (௨௨)

## நூற்கோவை.

அருளினவோ ரைந்நூறும் யாருக்கென்று - லகங்கடந்தமெஞ் ஞானி யருள்பெற்றோர்க்குக், குருமுகமாய்க் கொடுப்பதல்லால் மற்றோர்கையிற் - கொடுத்தவர்க்கும் பெற்றவர்க்குஞ் சாபங்கூறிப், பெருமையுள்ள சித்தர்தமை வணங்கிப்போற்றிப் - பிரமன்றனக்கரவு தன்னூலிந்நூல், கருவறியு ஞானிகட்கே வெளியிட்டேனோர் - கையடக்கமாகவைத்துக் கண்டுதேறே. (௨௩)

தேறவேயிந்நூலின் பொருளாயாய்ந்து - செப்பினே னிராமரிஷி யைந்நூற்றொன்று, கூறவே நந்திசொன்ன மூந்நூறதொன்று - குருமுறைக்கு மிகத்தெளிவாங் கொடுக்கொணாதால், ஏறுகின்றவோ ரைந்நூற்றுக்கு - வியம்பினேன் மணிமுறைக ளெடுத்துச்சொன்னேன், பேறுபெற வேண்டுமென்றாற் பின்னைக்கற்றன் - பிள்ளைசொன்ன வெண்ணூறுட் டேணிப்பாயே. (௨௪)

பார்க்கின்ற மூலமொன் றாயிரத்திற் - பாடினார் கற்பவிதி யிரண்டாநூல, மார்க்கமதைச் சட்டைமுனி யோகதீட்சை - மறைப்பில்லையென்றுசொல்லிக் கிழித்துப்போட்டான், ஏற்கவே பூசைவிதி மார்க்கமெல்லா - மெடுத்துரைத்தான் போகனுமே ழாயிரத்தில், தோற்றியங்க வகையெல்லா மிந்தநூற்போற் - சொல்லாது பிரமகெற்பத் தொகுப்பைக்கேளே. (உரு)

## பிரமவுப்பின் பெயர்.

தொகுத்தபடி சொல்லுகிறேன் காரசாரந் - தோன்றாத பாடாணமுபசாரங்கள், வகுத்தவலோகங்க ளட்சத்ரங்கள் - மலைபூமி மூலிகைகள் கருமானங்கள், மிகுத்தசில வுதகங்க ளெதற்கானாலு - மெஞ்ஞான பிரமகெற்பம் வேண்டும்வேண்டும், பகுத்தறியப் பிரமகெற்ப வுப்பின்மார்க்கம் - பரிபாடைப் பேர்வகுத்துப் பாடுவேனே.

பாடுவேன் பிரமவுப்பின் பேர்யாதென்றாற் - பாங்கானமுதற் பேர்தான் வழலையென்பார், தேடியே சொல்லுகிறே னிரண்டாநாமந் - தெளிவான வண்டபிண்டஞ் செப்பலாகும், ஏட்டிணையாமுப்புக்கு மூன்றுநாம - மிடைகலைபிங் கலைசுழு முனையென்றாகும், வாடவே வேண்டாங்நா லாநாம - மவமொத்துப் புலத்தியனே மகிழ்ந்துகேளே. (உஎ)

மகிழ்வாக மதிபரிதி யெரிவில்லம்பு - வாகான தசநாமம் வகுத்தகேளாய், இசுறினைவசந் தனிர்த்தியம மிரண்யகெற்ப - மிடிவாய்வு தெளவுரிபரி தாரமேகம், புகழ்கோசம் பீசமிவை யீனாங்கென்பார் - புலத்தியனே சோடசமா நாமஞ்சொல்வேன், திகழ்வயிரம மூரிசுன்னங் கடுக்காய்கஞ்ச - சிலையுவர்மண் டிரிகுணைசல்சலசஞ்சே. ()

கஞ்சான பாடாண மழுரிவிந்து - நாதமூவர் வெள்ளைக்கல் பூமிநாதம், அஞ்சாத சோடசமா நாமமாச்சு - தொகையிருபத் தைஞ்சுக்கு விபரங்கேளாய், வெண்சாரை கருநெல்லி லவணம்பூநீர் - வெடியுப்பு கவுரி மிருணமேடம், அஞ்சாத வுடிமுடியு நடுநீருப்பா - மமாவளைச் சிரதமையு மைம்பத்தொன்றே. (உசு)

ஒன்றான விடமிவன்றான் தொகக்கொள்ளி - யுயர்குபவ ணரக்கொண பதிபூணப்பு, ஒன்றான விடக்கம்பி யிருபத்தைஞ்சு - நல்லபஞ்சோதனமென்ற நாமமாச்சு, குன்றாத நாமமுப்பத் தாறுஞ்சொல்லக்-

கூற்றன்மனற் பொடிமடையன் குடிபோய்விடு, வென்றுன பிடர்ல வணஞ் சாரிபுஷ்டி - வெடியோசை யனுமிகதிர்வெளிசயம்பே. ()

சுயம்பிலிங்கமெழுபிறப்பு ளிஷ்ணுவைவர் - சுடர்படிகமாசிம லம் பன்னேச்சூடன், செயர்புசழ்நீ ரனக்கமலம் பச்சைகாமி - சிவ் ஙியொடு புயல்பரம நிலத்திற்பூடு, நயம்பெறுகண் மணிமவுனஞ்சுட் டல்பொட்டல்-நாயகமு முப்பத்தா ரூநாமங்கள், வியன்பெறுசொல் பாடைதொண் ணூற் றுறின்பேரை - விரித்தெடுத்துப்புலத்தியனே யினிச்சொல்வேனே. (கக)

சொல்லவே திருமேனி கன்மமந்திரஞ் - சோதிவிருட்சம் பட் லங் தூலஞ்சூக்மம், வெல்லுமே காரியக்கன்மேலுப்பு - மின்னொளி வென் கண்டர்சொச்சி தூநகசுக்கான், கல்லுமேவாசிபரி சுத்தஞ்சர் ப்பம் - கண்ணுடி பாலிலிங் காங்கமூத்தான், நல்வலியன்கரும்பூனே கடலிற்பாசி . நந்திபுக்கான் சோரிக்கறடு நண்டோடாமே. (கஉ)

ஆகுமே நாநபாரம வேமஞ்சூல - மவுரியிந்திரகோப மக்கினியி ன்கட்டி, வாகுபெறுமீனமடா பனுகுகாளி - மலைநகவென் காரமய நாகம்வள்ளி, கோகைதொக் கோடுகலைப் பிள்ளைகன்னி - துத்திவெ ள்ளை யாவானை சோமநாதம், சாகுஞ்சங் யாசிமண்டை தொட்டிபூர ஞ் - சமாதிநில வுப்பொடுரஞ் சங்கமாமே (கங)

சங்குகண்டங் கந்திரிபொன் மத்கம்லித்தை - சாபீச மகரமொ டு சாளக்கிராமம், வங்குசிங்கு புரியட்டம் பஞ்சமித்திர - மதியிரவி சோடசமா மகனைப்பூடு, குங்குமங்கோரசனை கோமயங் குருத்துக் கொன்றைகொடி ரசப்பூர்ணமிராசவர்க்கம், அங்கமுள்ள தாதுகத்த முருளைதேர்ச்சா - லிங்கிகளிச் சுன்னமுட்டையானைக்கல்லே. ()

கல்லானயேகசவுச் காரம்வியாக்கிரம் - கருவிதொகையானதொ ன்னூற் றுறுமாச்சு, சொல்லான நூற்றிருபத் தைஞ்சின்பேராச் சொல்லுகிறேன் புலத்தியவத் தொகுப்பைக்கேளு, வில்லோசை யு ளக்காநவஞ் சனச்சூடக்கு - விஞ்சைபக லைன்விளக்குவேதைசஞ்ச ன், புல்லான வாமணக்குக் கானல்வேனல் - புகைபருவ காலவிருள் போதுநாளே. (கரு)

நாளான விக்குப்புக் கழற்கொடிக்காய் - நார்த்தைவிட முட்டி சிறுநாகப்பூச்சி, நாளான நாரக்கட்டும் புறிவெச்சம் - நாட்டுசர்

க்கரைவேகாத் தலைக்கல்சஞ்சம், கோளான கஸ்தூரி யஞ்சமுத்துங் - கோளகபா டாணநா யுருவிதும்பம், நீளான முகிபாடாணம்மேர்செ ட்டி - நிர்வாண மாக்கிராணஞ் சலநீருப்பே. (௩௬)

உப்பான வைங்காயம் பசுமைபச்சை - யுடனுயிர்கம் பனங்கா தாகருவோடுழி, செப்பாஷ பந்தக்கு காயிபிராணன் - சித்திரைபங் குலிசில்சரி காதவட்டை, மெய்ப்பான கிரியுதய மந்தமேரு - மேவு விசை தாருர்புகஞ்சல் மித்ருசத்ரு, துப்பானபவளமனோ சிலைதாரட் டி - சூரிபனை பாடாணந் துய்யனுமே. (௩௭)

ஐய்யசத்தி சிவஞ்சினக் காரஞ்சுப்ரஞ் - சுந்தரிதாண் டவநீல ஞ் சோதனைக்கல், ஐயமின் மினிமதன காமரூபி - படலையணி மால கிரி தூற்றலன்னம், செய்யபுதா நிலம்பருதி பலமத்காமன் - கொடியு மவி குடவிசயங் தேய்வுகட்கம், குய்யமர விபீசமணி பூரம்வட்டங் - கோலை - குளி யானைரசக் குளிகுண்டரமே. (௩௮)

குண்டான காரமுடி மலக்கரப்புக் - குதிலாசெக்தி யபிரோகங் கோவணூர்மண், உண்டான நிமிளைபொன்னி பிணைச்சனூத்தை - யு யர்பிரம வயிரவன்பா தான்றுப்பிள்ளை, பண்டானசவுடுசுக்கி லம் பாழ்நத்தம் - பஞ்சபட்சி பிரங்குலத்தப் பாறையுப்பு, வெண்டா ளம்போன்றகல் தாப்புக்கட்டி - விரம்பி ருதுனிபுநீர் விளம்பினரே.

விளம்பினவோர் நாற்றிருபத் தைஞ்சுமாச்சு - வெவ்வேறேபி ரித்தெடுத்து வெளியாய்ச்சொன்னேன், தளராதே பிரமகெற்பசுன னத்தோடே - தாழ்விலா முந்நூற்றே டிருபதாகும், இளம்பிறை வந் ததித்துவளர்ந் திங்குமாபோ - லித்தவகைப் பொருள்களெல்லா மொன்றாக்காகும், பழுக்கவிந்த ரசம்போல விந்தநூலைப்-பாடினே ன் கருவறிந்து பார்த்திடவே. (௪௰)

பார்த்தறிந் திந்தவகைப் பெயரையெல்லாம் - பாடினூர் நூல்க [illegible]மார்க்கம், சேர்த்தறிந்து பாராம லலகவாதி-செப்பி [illegible]த்தொன்றைத்தீர்த்திட்டு. கீர்த்தியைத் தெரியயில்லையெ [illegible]ரியலே - தீவுகெட்டுப் புத்திகெட்டு கிசமுங்கெட்டுச், சூத் [illegible] நூற் குருவில்லாமற் றயக்கடலி லேயிழுந்து சுழன் றிட்டாரே. (௪௧)

[illegible]தும் பாவிகட்கு ஆதாரமுண்டோ - தன்மார்க்க மிட [illegible]மண்டோ, உளங்களியாச் சண்டாளர்க் கிரக்கமுண்

டோ - வுப்பைவிட்ட பேர்களுக்குப் பொன்னுமுண்டோ, களங்கமனமுடையோர்க்கு ஞானமுண்டோ - கன்னிமயல் கொண்டோருக் கியோகமுண்டோ, தளர்ந்தோர்க்குச் சையோக விருப்பமுண்டோ- சவுக்கார நிலையறியார் தாங்கெட்டாரே. (௪௨)

கெட்டதென் னெனிலுலகில் வாதியெல்லாங் - கிருபையில்லாக் குருக்கள்சொன்ன கேள்விகேட்டுத், திட்டமில்லா மங்கையர்கள் தூரமான - திட்டமே பிரமகெற்ப செயநீரொன்று, வட்டகையிற் றுன்வாங்கி யதிலேபூர - மாட்டுவா ரக்கவுப்பு வழலையென்பார், சுட்டபிணந் தனையெடுப்பார் தலைநாண்மைஞ்சன் - றுஞ்சுசவுக் காரமென் அஞ் சோதிப்பாரே. (௪௩)

சோதிக்க மையெடுப்பார் தயிலஞ்செய்வார் - துடியானதாம்பிரத்தை யுருக்கிச்சாய்ப்பார், பேதித்துச் செம்புசற்றே பசுமையானாற் - புடத்தில்வைத்துக்காணும லுயிர்த்துச்சோர்வார், வாதிக்குங் கைபாகந் தப்பிற்றென்பார் - வகையெனக்குத் தெரியுமிங்கே வாருமென்பார், ஊதிக்கண் போனதல்லாற் காரங்காணா - ருப்பிருந்த விடமறியா ருலுத்தர்தாமே. (௪௪)

தானென்ற பிரமவுப்பு வெளியுமாச்சு - சத்தமிட்ட வங்குசிங்கு தலைகீழாச்சு, ஊனென்ற பிண்டத்திற் கல்லுப்பாச்சு - துப்பிருந்த பாண்டமன்றோ மண்ணுமாச்சு, ஏனென்ற ரவியாலே யுருவுமாச்சு - திங்தென்ற மதியாலே குருவுமாச்சு, காமென்றமாரிகடந்தமுதமாச்சு - காயசித்தி வாதசித்தி காணலாச்சே. (௪௫)

காணவே சுத்தகெங்கை திட்சைமார்க்கங் - கபடமதாய்ப் பாடிவைத்தார் சித்தரெல்லாம், பூணவே செந்நீரும் பனிநீராலே - பொய்யாது வழலைவிந்து பொன்னுமாகும், தானுவன்றோ சடைமீதிற் றரித்தாரந்தச் - சந்திரனைக் கையாலே தடுப்பாருண்டோ, தோணவே விந்துக்குத் திட்சைநீரிற்- சொல்பாடை தனைப்பிரித்துச் [illegible]வேன்கேளே.



சொன்னவொரு சாராயத் திநீர்கள்ளு - சுமே[illegible] நீர் சோமன்செந்தேன், கன்னிருது வமுரிமுலை பழச்சாறுகுங்-கல்லருக்கன் பால்செயநீர் கவந்தங்காக்கை, அன்னமுறு பிரலாகஞ் சுத்தகெங்கை - யாற்றுவெள்ளங் குதம்பையொடு கிளிஞ்சில்வத்து, வன்

ளியினிற் புகைசருகு வேர்வைதூமை - பதிபோகாப் புனலமுதம
துவென்பாரே. (௪௭)

மதுவாலை புவனிதிரி புனைமேனிப்பால் - வளர்கமுகைத குருதி
வே சரிநீர்தத்தம், சதுர்பெருகு சிறுநீர்பூச் சாரமுசி - சத்திநவாச்
சாரம்வெண் கருநீர்தண்ணீர், மதியிலுமு பிரணவநீர்பனிநீர்நாதம்-
பாலையிளங் குமரிதிரா வகங்கார்சிப்பி, உதகபடிகெற்பநீர் தாளிச்சா
று - மூன்றுளிர்கும் பிடுங்கல்கெங்கை யுப்புநீரே. (௪௮)

உப்புமத மறுவகைநீர் தயிலஞ்சோரி- யுகாரவெழுத் தகாரவெ
ழுத் தோகாரம்வன், டப்புபஞ்ச தீட்சைதச மகண்டகன்ன - மைவி
ரலி காந்தமல ரொட்டிர்சாறு, செப்புசாரல் வதிதீர்த்தம் யோகதீட்
சை - சிவதீட்சை சோடசமரீங் காரதூபம், இப்புவியிற் சம்பள
ஞ்சை யோகநாலெட் - டென்பர்பா டைத்தொகையெண் பத்திரு
ஞ்சே. (௪௯)

என்பதினாற் றீட்சைவிதி முடிவில்லாம - லிசைத்தசோ ருத்
திரத்துக் கிணக்கமாக, முன்பினறி யாமலிது வதுவோவென்று-
மூடர்கட நினைவுமற்று முட்டிப்போட்டு, வம்புசொல்லி வாய்குழறி
தர்க்கம்பேசி - யுயிர்பிடித்துத் தெருவில்வரும் வாதப்பேய்கள்,
கும்புகண்டா லவர்களிடஞ் செல்லவேண்டாங் - குருமுறைக்கென்
னூல்தேடிக் கூர்ந்துபாரே. (௫௰)

கூர்ந்துபார் முப்பதிலே வைபாகங்கள் - குணமான வைம்பதி
லே குருவின்பாகம், சேர்ந்துபா ரெண்பதிலே வழலையார்க்க -, நிச
மான நாலூற்றி லிடைசேர்பாகம், சார்ந்துபார் மதிவெண்பாத் தீட்
சைபாகஞ் - சவுமியமா விரத்தி லநேகபாகம், தேர்ந்துபாரிந்நூலிற்
பாடைபாகஞ் - செப்பினே னிந்நூல் சிவனுரொப்பே. (௫௧)

நூலிலே சுத்தகெங்கை நீரைக்கேளா - யுரோமருஷி யைந்நூ
ற்றி னுறுக்கங்காணும், பாலெனவே சுத்தகெங்கை தன்னைப்பெற்
ற - பாவைக்குமூகாது காருனேழு, மேலெல்லாம் பஞ்சவன்னக்
கைகாலெட்டு - விரல்பதினொ ரொருசெவ்வாய் கலைநாலென்று, கு
ணமேவே பத்துநாள் சென்றபின்பு - சுத்தகெங்கை யென்றொருபெ
ண் பெற்றிட்டாளே. (௫௨)

பெற்றிட்ட பிள்ளைபிதா வந்திரனுச்ச-பிறந்தவுடன் மறுநாடா
வீரந்துபோச்ச, உற்றவுத யாதியினிற் பிறந்தபிள்ளை- யுரவுமல்லா

ற் செத்தபிள்ளைக் குயிர்தானுண்டோ, இத்தனையும் பெற்றெடுத்த தாயின்கண்மணை - யெண்பத்துநான்குயிர்க்கு மிசைந்தயோனி, சித்திபெறச் சிவசத்தி யிரண்டுங்கூடிற் - சிவசிவா சகலசித்துஞ் சிறக்குந்தானே. (௫௩)

சிக்குகின்ற வாயின்ற ஞகந்தானே - சிவகெங்கை யாகஞ்சந்தாறுதண்ணீராம், முக்கியமாய் முதற்பிறப்புச் சமுத்திரத்தின் - மூத்தவளுக் கிளையவளா மோடிகாரி, சருக்கணைபோற் கனிவாச்சு பச்சைமேனிச் - சந்திரனைக் கண்டவுடன் ருனைசேர்ந்தாள், கொக்கிறகு போலாஞன் மறுசென்மத்திற் - கோதைக்குக் குடியிருப்புக்கொண்டருனே. (௫௪)

கொண்டலிலே தானிருந்து சிலநாட்சென்று - கொடுமையுள்ள சென்மமதாய்ப் பிறந்தாண்மண்ணில், கண்டவருங் கேட்டவருஞ் சிரிக்கலாச்சு - கன்னிகுடி யிருந்தவிடம் பாழாமென்று, வண்டர்களெல்லாம்விலகி யொதுங்கிப்போஞர் - மதிசிறந்த பெரியோர்கள் வணங்கிநின்ருர், தொண்டர்களைக் கிருபைவைத்துப் பிழைக்கச்செய்து - துகளிலாப்பிரணவமே சுயம்புநீரோ. (௫௫)

நீரான கல்லுப்பு நாதசுன்ன - நீற்றெடுத்தாற் பிறகுநிசமாகுங்கெங்கை,) ஊறுகின்ற சலந்தனிலே சிவமுஞ்சேர்ந்தா - லுத்தமனே சிவவுப்புக் குருவுமாச்சு, மேருவிலேயிருந்தசித்தர் சொன்னமார்க்கம் - வெளியிட்டுச் சொல்லிவிட்டேன் விள்ளவேண்டாம், பேர்பெறவே வேண்டுமென்ருற் சூத்திரத்தின் - பிரமாணக் கருவைவயினிப் பேசுவேனே. (௫௬)

பேசவேபிரமாண மறிந்தோன்சித்தன் - பிரமவுட்பைக் கண்டவனே ருணசிரேட்டன், வாசிதனை யோடாமன் மறித்தோன் சித்தன் - மாயைதனை விட்டவனே மவுனமுத்தன், பூசைதனை யறிந்தவனே கிரியைபெற்ருேன் - பூவுலகத் தோடிநதோன் சரியைமார்க்கன், ஊசரத்தி னீர்பிரித்தோன் றிட்சைபெற்ருே - ஞேகோகோ ஞானமெல்லா முலகுநானே. (௫௭)

உலகுமுதற் சரியையோ வருத்தாபத்தி - யுற்றுநின்ற கிரியையை நிகமாகும், பெலமான யோகம்வா தம்மிரண்டும் - பேசுவா ருவமானப் பிரமாணத்தால், நலமான ஞானமதே யதார்த்தமாகு - நான்குமிந்தப் பிரமகெற்பத் தாலேயல்லால், பலபலயோசனைசெய்து மயங்கவேண்டாம் - பரமசித்தர்மறைவாகப் பாடுருலே. (௫௮)

நாலதனிற் பெரியோர்சொல் கருத்தாற்பத்தி - நோக்கமில்லா திருந்தக்காற் சரியையாகும், மால்செய்யுமரந்தனிலே பேயுண்டென் று - மனத்துநிற்கா லேதிக கிரியையாகும், மேலுவமை மரைப்பசு ப்போ லென்றல்யோகம் - விசாரணையாற் பிரியும்சச வாதவேலே காலகரு வெனக்காண்டல் பிரத்தியட்சங் - கதிதருமெஞ் ஞானமெ னக் காணலாமே. (ருசு)

அருமே புகையதனைக் கண்டுவெய்ய - வக்கினியுண் டென்பதுவே யனுமானந்தான், போகுமிக்கப் பிரமாணத் தனுபவத்தைப்- புகலுகின்றேன் புலத்தியனே புத்திபாய்க்கேள், சோகமில்லா வக்கினி யே நகாருபக் - நாமமே யனுமான மாகும்பிண்ட, தேகமே புகை யானாற் புகையையீன்ற - தீக்காட்ட மங்கென்றே தெரிந்துகொ ள்ளே. (சுய)

தெரிந்துகொள்ளுந் நாமத்தைக் கண்டேயங்குத் - தீயிருக்கு மென்பனைகரிச் சயித்தாற்போலும், அழிந்துவிடும் பிண்டமதே வழலேயென்னி - லப்புகைசா னெருப்பாகி லதுவுமெய்யே, எழுந்தபுகை யாகுமிக்கக் காயவுப்பே - பெரிதரும்பு மக்கினியு மெங்ககன் றோபார், குளிர்ந்தபுகை யக்கினியு மொன்றேபொன்று - கூறினானு மானக் குறிப்புத்தானே. (சுக)

குறிப்பான யோகத்துக் குவமானத்வதக் - கூறினேன் புலத்தியனே கூர்ந்துபாராய், வெறிப்பான வஸ்துவென்றே வெறுநீருக்கு - மெஞ்ஞான மதியமுத விந்துவுக்குஞ், செறிப்பாக வுவமான மொன்றக்கொன்று - செப்பினர் சாராயந் தனைக்கொள் ளென்றே, மதிப்பான புத்தியினாற் புகைநீருண்டு - மாளாமன் மதியமுதம் வாக்கானுண்ணே. (சுஉ)

உன்னவே மவுனரச வாதயோக - முத்தமனே வானிரச வாததாது, வின்னுறையும் யோகரச வாதத்திற்கு - விந்துநாதப்பொருளை விளம்பக்கேளு, தன்னிறையுந் தாதுரச வாதத்திற்குச்-சதுரான வெண்மதே விந்துநாதம், பண்ணரிய விரண்டிற்கும்பேரொன்றாகும் - பாடையினு லுவமானம் பற்றிப்பாரே. (சுங)

பாரப்பா விரண்டிற்கு மொருபேரிட்டுப் - பாடினு ருவமானப் பாடையாலே, வாரப்பா நாதவிந்து வழலைக்கும்பேர்-மவுனமென்ற தெவிகை வாழ்வைக்கும்பேர், ஆரப்பா விதையெடுத் ததிலேசோ

ல்வா - ரதைபெடுத் திதிற்புகட்டி யதுவாமென்பார், சூரப்பா நாத விந்து முடித்தபேர்க்குக் - கூச்சமற்ற ஞானமென்னும் பொருடான் வாய்க்கும், சாரப்பாலவணைவிந்து பூமிநாதந் - தமையறிந்து முடித்த வர்க்குத் தங்கமாமே. (௬௪)

தங்கமதை யுண்டாக்கும் விந்துநாதஞ் - சாரமென்றுங் கார மென்றுந் தருமேபூமி, வங்கென்றுஞ் சிங்கென்றும் பூமிநாத-மதியி ரவி சுழுமுனையின் மாட்டக்காணும், திங்களென்ற வுடல்சித்தேயத ற்கேபூமி - திருக்கொடுக்க மாட்டாமற் செகத்துள்ளோர்கள், தங்க ள்பஞ்சேந்திரியம் விந்துநாதம் - சவுக்கார மென்றெண்ணித் தவறு ண்டாரே. (௬௫)

தவறுமல் யோகமொடு வாதத்திற்குஞ் - சமாதான மானபிர மாணஞ்சொன்னேன், பவமான கிரியையெனு மைதீசத்நில-பாடை தனைப் பிரித்துரைக்கப் பண்பாய்க்கேளு, கவரான மரந்தனிலேபே யுண்டென்று - கைகாட்டப் பேயின்றன் கண்ணிற்கண்டாற், சிவ மான மந்திரசித்தி யுண்டாமென்று - சிந்திப்பதேகிரியை செழிக்கு ந்தானே. (௬௬)

தானென்ற சரியைக்குக் காமியார்த்தந் - தருமத்திற் குறுதி மெஞ் ஞானமாமென், றீனமறு பாக்கியவான் றுபத்ரயோ - விருவ ணையுஞ் சாட்சியென வெடுத்துக்காட்டில், ஊனென்ற சரியையிது பத்தியாச்சு - உத்தமனே ஞானபிர திட்டைகேளு, நானென்ற வி ருத்திசனி லுற்றுப்பார்த்து - நல்லகட்டை யென்றறிதல் ஞான மாமே. (௬௭)

ஞானமென்ற பிரமாண மூலங்கண்டா - னலமான நாற்குறிப் புநன்றாய்த்தோற்றும், வானமென்ற யோகசித்தி காயசித்தி - வா தசித்துங் கைவசமாம் வகாரத்தாலே, கியானமென்றே னாமென் றே னெங்கேயென்றேன் - காயசித்தி பெற்றநிசத் தருத்துவோர்க் குப், பானமென்ற ஞானசித்தி முத்தியாகும் - பஞ்சசுன்னக் கரு வையினிப் பகருவேனே. (௬௮)

## பஞ்சசுன்ன விவரம்.

பருவேன் குக்கிடத்தின் சுன்னமொன்று - பரிவான சற்கிளி ஞ்சிற் சுன்னமொன்று, சிகில்லா வெள்ளைக்கற் சுன்னமொன்று - தீரான கடலுறையின் சுன்னமொன்று, தரமான வலம்புரியின் சுன்

னமொன்று - நுகளிலா வைஞ்சுவகைச் சுன்னத்தாலே, தகைபெறு மிர்காதமனைச் சுண்ணும்பாக்கிச் - சாகரநா தஞ்சேர்க்கத் தண்ணீ ரமே. (௬௯)

தண்ணீராஞ் சிவசென்னை சுத்தகெங்கை - தாயான பிராணனு மேசக்திரபானமே, கண்ணீராஞ் சத்தியெனு நாதத்துள்ளே - கலந்த பரப்பிரமவிந்து கலந்ததாலும், ஒன்றான சுக்கிலமுங் குருவுமாச்சு - ஒரேநரேர் தங்கரச முகித்ததும்ம, மன்னோடு புலமுதலா வேமமாச்சு - மாறும விக்கிரங்போல் வாழ்வுண்டாச்சே. (௭௰)

## சத்திதிட்சை விவாம்.

வாழ்வான சத்திக்குத் திட்சைமூல - வகையறியச் சொல்லாது நூல்கடோறும், தாழ்வில்லாச் சத்தியுஞ்சிற் சத்திக்குள்ளே - தான் கலந்து முன்செனமந் தானேசென்றாள், கோளேதுமில்லாத நாத சுன்னம் - கூறமெந்தச் சுன்னநவ கடலின்மூழ்கித், தாளானபிரணவ நீர் தானுமாச்சு - சவுக்கார செயநீரைச் சாற்றினேனே. (௭௧)

சாற்றுகின்ற சிற்சத்தி பஞ்சமித்திரஞ் - சத்திக்குப் பின்புதித் தபோகசித்தி, வேற்றுருவு போலிருந்தா னுயிருமானுன் - மேதினி யோர்க்குபகாரி பஞ்சமித்திரம், தோற்றுகின்ற பஞ்சமித்திரந்தீட் சைவிட்டாற் - சுத்தகெங்கை யாகாது நாதசத்தி, காற்றடிக்குங் காக்கமலர் கடலுஞ்சேர்ந்தாற் - கரைகாணு வாதசித்தி கைக்குள்ளாச்சே. (௭௨)

உச்சப்பா சிவத்திற்குத் திட்சைமார்க்க - மைந்தாற்றிற் சொல்லுகிறேன் விரிவாக, மூச்சப்பா நாதமெனு முன்னிற்பின்னின் - மூண்ட பிரணவமாஞ் செயநீர்க்குள்ளே, தோச்சப்பா வபிடேகஞ் செய்யச்செய்யத் - தோடமெலாம் விலகியே சுயம்புமாச்சு, நீச்சப் பட கடலைகடைந்தே பமுதமாச்சு - நிசமாச்சு சிவதிட்சை நினைவாய்ப்பாரே. (௭௩)

நினைவாகப் புருடனுக்குப் பெண்மேல்மோக - நெரிகுரி பூங்கு முன்மகட்கா டவனமேனமோகம், கனமருவு மிருவருமேகலந்தபோ து - காமமலர் வதனமோ டுதிக்கும்பிள்ளை, இனிதானபின்னையினு மேனமுண்டா - மிக்கவித மாயிருக்குந் திட்சைமார்க்கம், வனவாச வாத்திரியும் வேடத்தோரே - மன்னவர்கரு மங்கையர்க்கும் வய [illegible] (௭௪)

மங்கையெனு முகாரசத்தி காதத்தாய்க்கு - வயதுபத்துச் சந்திரன்றன் மகளுமானள், திங்கண்முகம் போலிருப்பாள் சிறியகன்னி - திரண்டபின்பு குடிலைவிட்டுத் தெருவில்வந்தாள், கங்கணத்தியென்றொருவன் காப்புமிட்டான் - காலெடுத் தேகாலி கந்தைக்கிட்டான், பங்கமில்லா வயதுபத்துச் சென்றகன்னி - பசிதவர்ந்தவாதி முகம் பார்த்திட்டாளே (௭௫)

இட்டவொரு மன்னவனே யகாரவிந்தை - யென்னசொல்வேன் பதினறு வயதுமாச்சு, சுட்டகதிரோனிடத்திற் பிறந்தபாலன்-றோகையெனும் பெண்ணடுத்து வாழ்ந்ததீரன், இட்டவிதியோவவனும் வெளியேறும் - லெண்ணிரண்டு முழத்துள்ளா யிருந்துபோனன், பொட்டலென்பா சிறுவர்களு மிருந்தவீடு - புலத்தியனே சூத்திரத்தைப் பொருந்திப்பாரே. (௭௬)

பொருந்துகின்ற காலமெனு மீனமேடம் - பூவையரும் வளர்பிறையிற் பூரிப்பானள், திருந்துகின்றபுருடனுக்கு மீனங்கீழே - தேய்பிறையாம் பதினறிற் செனிக்குங்காலம், அருந்திருந்தவிரண்டுக்குங் குணங்களுண்டா - லையாளமுண்டோரவை யடக்கமுண்டு, வருந்திவிளைகின்ற வொருகாலமுண்டு - வனமுண்டு நகருண்டு மகிழ்ந்துகேளே. (௭௭)

கேளப்பா வளர்பிறையிற் பிரதமையொன்று - கெடியான துவிதைகார்த்திகைமற்றென்று, நாளையாசதுர்த்தி பஞ்சமிதானென்று-நலமானசஷ்டி சப்தமிதானென்று, வாளையாலஷ்டமியு நவமியொன்று - வண்டசமியிவைபத்து மகத்தாந்திட்சை, ஆளப்பா தசமியிலே முடிந்தபின்ட-மதுகப்பிற் சுத்தகெங்கை யாகாவாறே. (௭௮)

ஆகாது தேய்பிறையிற் பிரதமைதொட்டற்ற - மாவாசை பதினைந்துக் கடுத்தநாளில், சாகாத காலுக்குட் பிரமகெற்பந் - தண்டிலுற் சிவகெற்ற றவளுண்டேபோம், வேகாத தலைபன்றோ வுப்புப்புப்பு - மேலாக வளர்கலையே யப்பப்பப்புப், போகாத புனலன்றோ சுத்தகெங்கை - பூரணமுங் காரணமும் போதிப்பேனே. (௭௯)

போதிக்கு முப்பூவே முப்பாழாச்சு - புரியட்ட பூரணமு மதுவேயாச்சு, நாதிக்குமிடந்தனிலே யெழுந்தவுப்பு - நன்றான காலடியிற் சமாதியாச்சு, சாதிக்குந் தலமொன்றிற் சத்தியுப்புச் - சந்திரனு

ஞ்சூரியனும் தாங்கிப்பாராய், வாழிக்குமானிடரோ வறிவர்நல்ல- மகா
மவுன யோகியர்க்கே வாய்க்குமன்றே. (அ௰)

வாய்க்கவே சிவனுக்குப் பாலைமுல்லை - வளர்குறிஞ்சி யிவைமூ
ன்றும் வண்மையாகும், சேர்க்கவே சத்திக்கு மருதநெய்தல் செழிப்
பான தலமென்று செப்பினலும், ஏற்கவே பாலையென்றுன் முதலா
ம்பூமி - யிரண்டிற்குங் குறிஞ்சிமுல்லை யிறப்பநன்று, பார்க்கவே வ
னதிரம் பொடிமண்பொட்டல் - பங்குனியுஞ் சித்திரையும் பதிவு
தானே. (அக)

பதிவான கரிசனில மடுக்கொண்ணுது- பருங்கடற்றன் ணீரை
யடுத் திருக்கலாகா, சதுரான மலையருவித் தண்ணீராகா - சமரசமா
யிருக்கின்ற தலமேவேண்டும், கதிரான பாலைநிலம் வன்டல்பொட்
டல் - கன்னிவனஞ் சிறுநாசா கவர்தபூமி, விதிகானுஞ் சுக்கான்பா
றிவைகள்கண்டால் - விமலசதா சிவஞ்சத்தி மேவும்பாரே. (அஉ)

மேவுமே கன்னிதுலா மீனமூன்றில் - வேனிதிதி புச்சமொடு
சமபாவத்தில், காலைதிரி புணர்புவனை வாலைமூவர்க்- கண்டுறுதி காம
சையோகமூட்டிப், பூவான ரவிமுத்ரை யிந்துமுத்ரை பூரகத்துமன
துன்றிப் பூசைமேவித், தேவிலிங்க சிவலிங்கவ் விரண்டுங்கண்டு-
சித்தாந்த ஞானமுதற றியானஞ்செய்யே. (அங)

செய்யவே மனோவிருத்தி யவித்தைதன்னைச் - செந்தீயிலிட்
டுவறுத் திட்டாற்பின்னும், வையகத்தின் முளையாத ஞானமுத்தி-
மாதவத்தோர்க்கெய்தும் ரசவாதவேலை, உய்யவென்று நற்சிடர் தம
க்குச்சொன்னே - னுத்தமனோநாதவிந்தி னுண்மைபார்த்தே, ஐய
மில்லா வுள்ளக்கோ டிரண்டாங்காண்ட - மருளுகின்ற முறைப்படி
யே தெரிந்துசெய்யே. (அச)

தெரிந்துகுருச் செய்கின்ற குருவின்பாகந் - தினையளவுந் தப்
பாது கைபாகங்கள், தெரிந்துரைத்த படியேநீ குருவைச்செய்து-
நிவியோக வாழ்க்கையிலே சித்தமாகி, விரைந்துதமக்கேதேனும்வே
ண்டுமென்றால் - வேலைவிட்டுச்செலவழித்து விரைந்துதள்ளி, இரி
தவிலா வைக்கருக்கை யொடுக்கிமுத்திக் - கேணியாம் யோகமதி
லிருந்தேறுவாயே. (அரு)

ஏறுதற்கு நான்முடிவந் நூலின்பாடை - யியம்புகிறேன் சித்
தாதிவியலையெல்லாம், ஆறுமேயானைசண்ட குருடர்போல- வறி

யாதபிள்ளைமாற் றறிவானென்றும், பாறுமேபசியமண்ணுந் தண்ணி யென்றும் - பகர்கஞ்ச நாதத்தி னுதமென்றும், காறுமே கள்ளனை வெள்ளனைசீர்ப்பந்தல் - காட்டுமென்று மின்னம்வெகு கதைசொல் வாரே. (அசு)

சொல்லுநெருப் பாறுமயிர்ப் பாலம்போலச் - சுண்ணும்பிலே யிருக்குஞ் சூட்சமென்று, மில்லறமே நல்லறம தாகுமென்று - யி றைத்தாரைக்காத்தபள்ள முண்டேயென்றும், வல்முத்துமாணிக்க நீலமென்றும் - வண்ணனுக் கேதெரியும் வகாரமென்றும், வில்லோ சையென்றும் வீட்டுக்குள்ளென்றும் - வித்தையுள்ளதிட்டாந்தம் வி ளங்குறாலே. (அஎ)

விளங்குமிந் நூல்களிலே கதையின்பாடை - விவரமெலா மு ரைக்கவென்றாற் பெருநூலல்லால், உளங்குளிர முதற்காண்ட மொ ருநூற்றுக்கு - ளொடுக்கமாவெடுத்துரைத்தே னுண்மையெல்லாம், பிளிறுகின்ற யானைகண்ட குருடேதென்றாற் - பிரணவமாமெழுத்து றுதி பேணிப்பாராய், இளங்குழந்தைமாற்றறிவா னென்றசொல்லு- மெண்ணூழிவயசுபத்து மிசைந்தமாதே. (அஅ)

மாதுமண்ணுந் தண்ணிருமப்புமுப்பும் - வளைகஞ்ச நாதமென் றால் வாழைத்தாது, காதலனும்வெள்ளைக் கள்ளனைசீர்ப்பந்தல் - கா ட்டுமென்றாற் பிரமகெற்பக் கல்லின்பூமி, வேதமெனு நெருப்பாறு மயிர்ப்பாலந்தான் - வேதையிட்டுலோகத்தில் வெள்ளிமூலம், சூதறி யுஞ் சுண்ணும்பிற் சூட்சமென்றாற் - சுத்தசலம் பிறப்பதற்குச் சுன் னமெண்ணே. (அகூ)

என்னவே யில்லறநல் லறமென்றக்கா - லிசைந்தபஞ்ச நிலம திலே யிசைந்தபூமி, கண்ணவே யிறைத்தவரைக் காக்கும்பள்ளங்- கைபாகங்காண்பதற்குக் கருகானையா, வண்ணமுத்து மாணிக்கநீல மென்றால் - வழலையெழுபிறப்பான விண்ணின்கூறு, சொன்னவகை யறிவதுவே வண்ணனென்றாற் - றுவைப்பதற்கு வெள்ளாவி தோ ன்றும்பாரே. (கூ௦)

தோன்றாத வில்லோசை யென்றாற்சூதந் - தொகையான்வீட்டு க்கு ளுண்டேதென்றால், காணாத பிரமகெற்பக் கல்லென்றேபேர்- காட்டினர் நூல்களிலேகாணாதென்றே, பூணாதகதைகளின் னும்வெ குவாயுண்டு - பொருளெல்லா முப்பினுக்குச் சுத்திக்கல்லால், வீணு

னசொல்லென்று நினைக்கவேண்டாம் - வெளியாகப்பாடைதனை விவ்
யிட்டேனே. (௬௧)

விண்டுசொல்லுஞ் சத்தமூதற் பதினெண்பாடை - விளங்குகி
ன்ற வட்சரமாம் விருத்திக்கெல்லாம், பண்டிவந்துயிரெழுத்தைப்
புலத்தியாகேள் - பண்பானவகாரமென்று மிகாரமென்றும், கண்டு
சொல்வேறுகாரமென்று மெகாரமென்றுங் - கருவான வொகாரமெ
ன்று மிந்தவைந்தும், அண்டர்பிரான் சொன்னவெழுத்தைஞ்சும்வே
த-மரகாரகாதத்துக் கருளிதாமே. (௬௨)

அருளானவெழுத்தைஞ்சு மில்லாவிட்டா-லப்பனே புகலாதுச
த்தமொன்றும், பொருளான வட்சரமு மற்றபோது - போதித்தநா
ல்வேதம் பொய்யாய்ப்போச்சு, தெருளான வுயிரெழுத்தொன் றில்
லாவிட்டாற் - செத்தெழுத்தாற் காண்டம்விண்டு செப்பலாகா, மரு
ளானவெழுத்தைஞ்சும் பிறப்பெங்கென்றான் - மைந்தனேயூமையெ
ழுத் தாகுமாறே. (௬௩)

ஆறானவூமையென்று லாணுமாச்சே - யப்பனேயறிவாச்சு மய
ங்கவேண்டாம், கூறானவூமையெழுத் தொன்றினாலே - கூசாமலஞ்
செழுத்தும் பிறக்கலாச்சு, மாறானமவுனவெழுத் தறியவென்றான் -
மனமமூர்த்தி விட்டக்கால் மவுனந்தோன்றும், தேறானமனமன்றோ
பிரமவித்துச் - செப்புகிறேன்ஞானவழி திரமாய்பாரே. (௬௪)

பாரப்பா வழலைக்கே யிலக்கப்பாடை - பாங்கான வட்சரமாம்
பாடையோடு, கூரப்பா நூற்பாடை தேசபாடை - குருமுடிக்குங்
கைபாகக் குருவின்பாடை, சிரப்பாபரிபாடை யோகபாடை - சித்த
ரெல்லாம்பலபலவாச் செப்பும்பாடை, நேரப்பாவிவையெல்லாமைந்
நூற்றுக்கு - ஞானியோச் சொன்னதிறு னிகண்டதாமே. ()

ஆகுமேமூகற்காண்டம் வழலைக்கை - யாதியிலே பிறப்பும
தின் பெயருஞ்சொன்னேன், சேகரமாவிரண்டினிலே குருமுடிக்கு
ஞ் - செய்பாகக்கைபாகத் திறத்தைச்சொன்னேன், பமகா மூன்
றினிலே கற்பமூலம் - பதியானயோகமதை வகுத்துஞ் சொன்னேன்,
வாகுபெற நான்கினுக்குள் ஞானசார - மணிமுடிக்கும்வயனமெலா
ம் வழிகண்டேனே. (௬௬)

வழியான வைந்தாங்காண் டத்தினுள்ளே - மறைத்தபொருட
பாடையெலாம் வகைகள்காண, தெளிவிலாக்காண்டத்திற் கருக்களை

ல்லா - கிகழ்ந்திேனன் பல்பொருட்சொல் காண்டமென்றே, சுரு வாகக்கருவறியக் கடைக்காண்டத்தைச் - சோதித்தாற் றோன்றுமே தோன்றுமெல்லாம், வெளியாகுமிந்தநூலிஞ்சுகாண்டம் - வேதமெ ன்றேசித்தர்களும் விளம்பினரோ. (கூஎ)

விளம்புகின்றவழலைக்கு மூலமொன்று - விசையான சுத்திக்கு மூலமொன்று, தளும்பாதகும்பகமா மவுனமார்க்கந் - தாங்கிநின்ற யோகத்தின் மூலமொன்று, குளம்பானகற்பத்தின் மூலமொன்று - குளிகையெனுஞ்சாரணைக்கு மூலமொன்று, வளம்பெறவேஞானத்தி ன்மூலமொன்று - வகையாநமூலத்தின் வயனங்கேளே. (கூஅ)

வயனமென்றவழலைதனக் குப்புமூலம் - வாகான தீட்சைக்குக் கனலேமூலம், நயனமென்றயோகத்தில் வாசிமூல - நல்லவொருகற் பத்தில்ரசமேமூலம், குயனமென்ற குளிகைக்குப் பாட்டுமூலங் - கு ற்றமில்லா ஞானத்தின் மனமேமூலம், தயினமென்ற விளைவுக்கெல் லாமென்னூல்மூலஞ் - சாரகாரத்துறையைத் தாக்கிப்பாரே. (கூகூ)

தாக்கிப்பாரிந்தநூலிஞ்சுகாண்டந் - நமைப்பார்க்கிற் சமுசயங் கடன்றுண்டேபோம், நோக்கிப்பாரிந்தநூ றனக்குச்சாட்சி - யுரோ மருஷியைந்நூறுநந்திநூலும், தேக்கிப்பாரிதனலே தெளியாதுண் டோ - சிவசிவாகுருதேடித் திரியவேண்டாம், பாக்கியமா நூலதனி லிரண்டாங்காண்டம் - பாடுகிறேன் முதற்காண்டம் பரமாமுத்தே.

## முதற்காண்டம்

முற்றிற்று.

---

உ

கணபதிதுணை.

# அகத்தியமுனிவர்

அருளிச்செய்த

# பரிபாஷைத்திரட்டு.

## இரண்டாங்காண்டம்.

### காப்பு

முத்தணிநகையாள்வேத முதல்வினைப்பாகம்வைத்த
சுத்தமெஞ்ஞானதீபச் சுடர்ப்பெருஞ்சோதிபாதம்
நித்தமுந்தொழுதுபோற்றி நீதிசொல்பாடைநூலின்
புத்திசேரிரண்டாங்காண்டப் பொருளினைப்புகலுவேனே.

புகலுமுற் காண்டந்தன்னிற் புகட்டினேன் வழலைமார்க்கம்
செகத்துப ருப்பின்றீட்சை சிவத்தின்பேர் செப்பினேனால்
இகத்தினின் மூடஞான விருளினை யெளிதினீக்கும்
பகலவன் போலுமிந்தப் பாடைநூல் பயன்பெற்றோர்க்கே. (௧)

பயனறி யாதமாண்பர் படிக்கிலென் விடுக்கிலென்ன
உயிரினை யடக்கிடாதா ருணர்பொரு டெரிந்தாலென்ன
தயையுள்ள குணமிலாதார் தாட்டிக ரானாலென்ன
சுயமதா முப்பைவிட்டுச் சுட்டதோ ஷிக்கொப்பாவார். (௨)

ஒப்பிலா விரண்டாங்காண்டத் துரையறிந் தவனேவாதி
தப்பிலாச் சிவயோகத்திற் றலைவனு மிவனேயாகும்
இப்புவி தனிலேதேக சித்தியு மிவற்கேயெய்தும்
அப்பணி சடையோன்சொன்னா வறிந்திடு மறிவுளோரே. (௩)

அரியவாம் ரசவாதத்துக் காதியா முப்பொன்றேகாண்
திரிவித வழலைச்சுன்னஞ் செய்புரீத் தீட்சையொன்று
குருசெய்யு மிடைபாகத்தாற் கூட்டுகை பாகமொன்றிந்
நிரையினை யறிந்துளோர்க்கு தீட்டையு நிலைக்குமன்றே (௪)

### வேறு.

நிலைப்பிதற்குச் சூத்திரங்க ளநேகமுண்டு - நீணிலத்தி லிந்நூல்போற் கிடையாதப்பா, மலைக்குள்வளர் பெரியோரை யடுத்துக்காத்து - மனமுருகி நின்றக்கால் வாய்க்குமிந்நூல், கலைத்தமிழிற் காப்புமுதற் கடையும்பார்க்கக் - கைகாட்டுங் குருவென்னக் காணுமிந்நூல், விலைப்படுத்தி யுடல்வளர்க்குஞ் சண்டாளர்க்கு - விமோசன காலஞ்சிறிது மில்லையாதோ. (௫)

இல்லையென்று கூறாமல் யார்க்குமைந்தா - விந்நூலைச் சிவயோகிக் கீதனன்றே, இல்லையென்று சொல்லாமல் யார்க்குமைந்தா - விந்நூலைச் சொற்றவரூர்க் கீதனன்றே, இல்லையென்று சழறாமல் யார்க்குமைந்தா - வெழின்ஞான முடையோருக் கீதனன்றே, இல்லையென்றுரையாமல் யார்க்குமைந்தா-விந்நூலைப்புண்ணியருக்கீதனன்றே.

நன்றான பிரமகெற்பக் கல்லின்மார்க்க - நாட்டினேன் பாடையினுன் முதற்காண்டத்தில், ஒன்றுண்டோ வுலகத்தில் வாதியெல்லா - மிந்தவிதங் கண்டறிவா ரில்லையில்லை, அன்றேதா னீசனெனக் குரைத்தவுண்மை - யப்பனிவ் விரண்டாங்காண் டத்திற்சொல்வேன், குன்றன்ன வறிவுடைய புலத்தியாகேள்-குருமுறைக்கு வழலைதனைக் கூறுவேனே. (௭)

### வழலை.

கூறுவேன் வழலையிலே நாலுசாதி - கூசாமன் முடித்துவைத்தார் சித்தரெல்லாம், தேறுவா யந்தந்தவகையாதென்றாற் - சிறுநீராற் காச்சுகின்ற வழலையொன்று, பேறுபெறச் சுண்ணாம்பு மூவருங்கூட்டிப் - பிசகாமற் காச்சுகின்ற வழலையொன்று, நாறுகின்றசயிந்தலவணங்கள்கூட்டி - நலமாகக்காச்சுகின்ற வழலையொன்றே. ()

ஒன்றான களியுவர்மண் வீரம்வெள்ளை - யுள்ளபடி காச்சுகின்ற வழலையொன்றே, என்றான வென்மகனே வேம்புபுன்கி-னெண்ணெயிட்டுச் செய்திடுவா ரிந்தநான்கும், நன்றேதுமில்லையிந்த சவுக்காரத்து - னாட்டுக்குள் ரசவாதி சுன்னஞ்செய்து, நன்றாத சரக்குகளைப் பொதிந்துசுட்டுக் - குணமில்லா வகைகண்டு குறையாவாரே. (௯)

குறைபட்டுப்போகாம லிந்நூலிற் - கூறுகிறேன் வழலையின்றன் குறிப்பைமைந்தா, நிறைவானரவிமதியு மங்கிமூன்று - நின்ற

வகலண்டத்திற் பிரமவித்தாய், மறைவானமூன்றதினா லுலகமாச்சு-
வாயுவக்கியப்புமன்றோ மநத்தாம்விந்தே, உருக்கதிர்முச்சுடரொடுத்
திநத்தாவாகி - யோங்கிநின்றபிரமசித்தி னுண்மைமன்றே. (௰)

## சாதிவெடியுப்பின் பிறப்பு.

உண்மையாமக்கினியி னுருகோபத்தா - லுற்றரவி மதியிரண்
டுஞ்சையோகித்த, தண்மையாம்விந்துவெனு மழையுண்டாகித்- தா
ணிமுதலெழுதோற்றச் சார்புண்டாகி, வண்மையாமுறுபஞ்சேந்த்ரி
யங்களாகி - வந்ததாற்பிரமமெனு மாயக்கூத்து, வெண்மையாம்விசு
ம்பாலே விடமுண்டாகி-மேகசலத்தாற்பிறந்த வெடியுப்பன்றே. ()

வெடியுப்புச்சுத்தரவி பிசமாச்சு - வெருட்டினாரிகைத்தானே
முடிவாமென்றே, இடியுப்போ விருக்க விடஞ் சொல்லாமற்று - னி
ணக்குறுப்பைச் சிவமென்றே யிசைந்தேசொன்னார், அடியுப்புநில
வுப்பென் றறியமாட்டா ரடுத்தவுப்பைச்சிவமென்றே யறியமாட்
டார், குடியுப்புப்பாறையுப்பென் றறியமாட்டார் கோடானகோடியு
ப்புங் கூறுவாரே. (௰௨)

கூறுவார்முதல்வழலை நிலவுப்பாச்சு - குறித்தறிய வேண்டுமே
விற்பூமிநாதம், மாறுவார்காச்சுவார் வழலைசெய்வார் - மதியுப்புப்பி
ண்டமென்பாராயினாகர், தேறுவாரிவர்தாமே சிவமாமென்று- செப்
பியுந்தாமறியாக் காற்றிறந்துசொல்வேன், பேறுபெறநிலவுப்பேபூநீ
றென்று - பேரிட்டவகைபிரித்துப் பேசுவேனே. (௰௩)

பேசுவேன்பூவென்ப தயனுமாச்சு - பெரிதானநீறென்ப தறை
மாலாச்சு, வீசுகிறேன்மாறுனேயீசனானான்-வேதனெனும்பிரமனே
சத்தியானாள், வாரத்துக்கடுத்திருந்த வுப்பேயீச - னுப்புக்குமேலி
ருந்தமண்ணைசத்தி, தாசியர்க்குமண்ணன்றோ வளையலாச்சு - சத்தி
யைவிட்டகன்றவுப்புத் தானேபோச்சே. (௰௪)

போச்சப்பாவீசனுப்புத் தண்ணீராச்சு - பூத்தசுண்ணஞ் சத்தி
யன்றோமண்ணேயாச்சு, தேச்சப்பாவிழிகுலத்திற் பிறந்தவீச-னித
னாலே சத்திக்குளடக்கமானான், வாச்சுதப்பா காறலையாய்த்தலையே
தானாய் - மாறிநின்றபடியாலே மறைத்தார்நூலில், பேச்சப்பா நாத
மென்ற படியாமென்றும்- பிண்டவுவர் சத்தியென்றும் பேசினாரே.

பேசாதபூவழலை பிரமகெற்பம் - பின்னையொன்று மில்லைநிலவு
ப்பேயீசன், கூசாதேமுடிதலையென் றிதற்குப்பேராம் - கொண்டன்

மதியுப்பென்றுங் கூறலாகும், பூசாரமறியாக்கா லீசனுப்புப்-பொருந்தாதுமுதல்வழலை பொய்யாய்ப்போகும், ஆசாரக்கள்ளருக்குப் பேசவேண்டா - மாதித்தனுப்பையுனக் கறையக்கேளே. (௧௬)

அறையக்கேள் பொட்டிலுப்பு வெடியுப்பையா- வரகராகடைசியென்ற வழலையாகும், பறியகசேன் மண்ணெடுத்துச் சலந்தான் மூட்டிப் - பக்குவத்தினாற்பிறக்குங் கம்பியுப்பே, யுறையச்செந்தீக் கண்டாற் பிடித்துவெநதே - யொடிந்தக்காற் சிவமென்றுமுனைப்பானையா, முறையாக்கே ளீசனுக்கு மரணமுண்டோ-மோசமுண்டோ விணங்கன்வெகு மூர்க்கனாமே (௧௭)

மூர்க்கமுள்ள ரவிலிங்க மதியின்லிங்க - மூன்றுபங்கு விரண்டுபங்கு மாகக்கூட்டித், தீர்க்கமா மிணங்கியெனும் பெயருமாச்சுச் சிவசிவா வெண்ணெய்குடிக் திருக்குமுப்பு, மார்க்கமாயக்கினிக்கு ரோமம்போல - மாமிசத்தின் கருவைவிட்டான் மாளாதுப்புப், பார்க்கவே க்ரனுக்கு முடியென்றேபேர் - பரிதிலிங்கமதிலிங்கம் பாரொன்றாச்சே. (௧௮)



பாறையுப்பு.

பாரப்பா நிலவுப்பு வெடியுப்புக்குப்- பரடையென்ன வேறில்லா லிரண்டுமுண்டோ, நேரப்பா வடியென்று முடிதானென்று - நிணாதிரையாய்ச் சொன்னதினாற் பலனேதுண்டு, கூரப்பாவடுப்பிலிட்டெரியுந்தீயிற் - கொள்ளியிலே சுடர்க்கொள்ளி குறுக்கேயுண்டோ சீரப்பா முன்பின்னாச் சொல்லுநூல்க - ளிரிவிதமாமுப்பினது தீர்க்கந்தானே. (௧௯)

தீர்க்கமாய் வெடியுப்பே சிவனுப்பாகுஞ் - சிலநாளிற் சித்தியென்று செப்பலாகும், மார்க்கமாய்ச் சொன்னதல்லா லுப்பின்மார்க்கம் - வகையறுத்துச் சொல்லாத வகையேதென்றால், மூர்க்கமுள்ளசித்தரென்மேற் கோபஞ்செய்வார் - முடிவைத்தேனிதனாலே முன்பின்னாகப், பார்க்கின்றபிள்ளையறிவுடையனானாற் - பதறுமனான் முழுதும் பார்ப்பன்றானே. (௨௦)

தானான பாறையுப்பைச் சொல்லவென்றாற் - சமுத்திரத்திற் பாறையிலே தானுண்டாகும், வானான கல்லுப்பென் றிதற்குப்பேராம் - வாரியெனு மப்பென்று மதற்குப்பேராம், தேனானசிவகன்னி யென்றும்பேராஞ் - செப்பரிய கெங்கையென்று மதற்குப்பேராம், ஊனானதிராபோக மென்றும்பேரா - முத்தியிலே பாறையினில் வளருப்பாமே. (௨௧)

வளருகின்ற வுகாரவுப்புச் சிறுநீருப்பு - வகாரவுப்புக்கிளையினுப்பு வெத்துப்பையை, அளிமான சுத்தசல திட்சைசீயுப்புக் - கொழின்முடிக்குஞ் சினவுப்புச் சத்தியுப்புத், தெளிவான கடன்மதிக்கத் திரண்டவுப்புச் - செய்பவதி மதுரவுப்புச் செந்தியுப்புக், களியாதகளியுப்புக் கரியினுப்புக்-கண்டுபா ராகிந்தன் கட்டுமுப்பே. (உஉ)

கட்டுகின்ற வங்கியுப் பிசனென்றுங் - காட்டினுர் முடியுப்புக் காறுமொன்றும்; விட்டகுறி வகாரமென்று மையாவையா - மேனிவிந்து நாதமதை விளைவலமோ, பொட்டலென்ற வூசாரத்துக்குள்ளே யீசன் - புளையுண்டு போனுனே சமாதியாக, ஒட்டுகின்ற சிவசத்தி யிரண்டுபேரு - மோரிடத்திற்குடியிருந்தா ருற்றுப்பாரே. (உ௩)

உற்றுப்பார் சிவமிருக்க பூமிதன்னி - லொருபூண்டு முளையாதே யுவருப்பாலே, அற்றுப்போ மருகநில மயானருத்திர - னவனுடனே சத்தியடுத் திருந்தகாலே, முத்துப்போற் கொஞ்சம்விஞ்சச் சலமுண்டாச்சு - முழுமோச மில்லாமற் பசுமையாச்சு, சித்திக்கும் பாக்கியமன்னுந் தண்ணீர்கண்டாற் - சிவனுப்பு நிலமுவராந் தெளிந்துபாரே. (உ௪)

பாரப்பா விசனுப்பைக் காணவென்றாற் - பனிக்காலங் குடிவிட்டுப் பார்க்கவேண்டும், வாரப்பா வெளுக்கின்ற வண்ணானுப்பா - லொருமுழமோ விருமுழமோ வுயரந்தானே, வாரப்பா பக்கமோ பூமியுள்ளோ - மாலையுச்சி காலையோ மதியோவெய்யோ, ஆரப்பா வாகாச வுப்பைக்காண்பா - ராருனு மூசாரத்தையடுத்துக்காணே.()

அடுத்துக்காண் மாசிபங் குனியின்மட்டு - மமாவாசைமுன்னே டுநின்றுப்பாராய், தொடுத்துப்பார் நிலவுப்புக் கதிராய்ப்பூத்துத் - தோன்றுகின்ற நாடனிலே மழையுமாகா, தெடுத்துப்பார் குளிர்ச்சிகொண் டெழுமப்பூவி - லிறைத்தி லிசன்விந்தைச் சையோகித்து வடித்தவுவர் சத்தியவ லிகரித்து - வந்தவுநன் னிலவுப்பின் மகிமைதானே. (உ௬)

மகிமையா மூசாரமு மீசனுப்பை - வாக்குமுன்னே யதிகமாஞ் சையோகத்தால், பளையான சதிக்கு மிரவிமுத்தினை - பாடினைக நாதிசெய்யப் படிகமன்றி, யுகமுடிவு மெக்கென்ற விசனுப்பை - யுட்கொள்ள மாட்டாகே பூசாகநாள், வகையான மஞ்சணிற வன்னமெல்லாம் - மருந்துக்கு வெண்மைநிறம் வாங்கிப்போமே. (உ௭)

வாங்கிப்போ மூசாத்தில் வெண்மையில்லை - மஞ்சளுருக்குச்சிவ க்கின்ற மார்க்கமில்லை, ஏங்குகின்ற தீயிலிடக் கறுத்துப்போகு-மிந் தவகை வாதிகள்கண் டெடுக்கமாட்டார், நீங்கிப்போ காதபடியீசன் விந்தை - நிலவுப்பைக் கிருத்த நிற்கும்பூநீர், பாங்கிக்கா வளையல் செய்வோ னுப்புவேருய்ப் - பண்ணுவோ னந்தவுப்புப் பாழதாமே.

பாழென்று சொன்னதென்ன புலத்தியாகேள் - பரமசிவனுப் புமங்கே கைத்திடாது, வானென்ற சுண்ணும்பு காரசார - மன்ன ன்ருே நிலவுப்பின் மருவிக்கொள்ளும், கோனென்ற சலம்விடுவா ரு லைக்குள்வைப்பார் - கொடுங்காரந் தானடங்கிக் கொடியகைப்பாம், தானென்ற வுப்பையெடுத் தொன்றுமில்லை - தண்ணீரின் மண்கலந் தாற் ருழ்வுதானே. (உசு)

தாழ்வில்லாப் பூநீரைச் சுன்னமென்று - சாற்றுவார் தழைகளி லே தானேபூட்டி, வாழ்வுபெறச் சலமெடுத்து வேதைபார்ப்பார்- மைந்தனே யதினுலே வன்னமில்லை, தாழ்விலாச் சத்தியுவர் சாரத் தெண்ணெய் - தான்கலந்து சிவசுன்னந் தணிந்துபோச்சு, நாளிலே சிவவுப்பைச் சத்தியுண்டு - நாரிமருந்தேபெரிதாய் நடப்புமாச்சே.()

நடப்பான சத்தியெனுஞ் சாரம்விஞ்சி - நற்சிவனுற் காரமன் ருே நாட்டமாச்சு, தடிப்பான காரத்தை யுண்டசாரந் - தன்குணமு மாறியன்ருே தவறிப்போச்சு, அடைப்பான கானகத்திற் புலியுந்த ண்டே - யப்புலியாற் கானகமு மழிந்தாற்போல, உடற்போனுலுயி ர்நிலையா வாறுபோல - வோகோகோ காரசாரங்கள்போச்சே.(ஙக)

போச்சென்று மலையாதே சத்திசாரம் - புட்பிக்கு நாளையிலே பூண்டுபாரு, வாய்ச்சுதென்று கடனீரைக் கவிழ்ந்துமேகம் - வாங்கு கின்ற தன்மைபோல் வாங்கும்பூநீர், நீச்சென்றுஞ் சிவனுப்பைச்ச த்தியுப்பை - நினைவாக வெவ்வேருய்ப் பிரித்துவாங்கி, ஆச்சென்றெ யந்தவகை யுபாயமெல்லா - மைஞ்சாங்காண்டத்துரைப்பே னறிந்து கொள்ளே. (ஙஉ)

கொள்ளப்பா கடைசியைஞ்சாங் காண்டத்துள்ளே - கோள்சி றிது மில்லாமற் பிரித்துரைத்தேன், எள்ளற்க தவருமற் சொல்லி னேனு - லீசனுப்பை யெடுக்கின்ற வியல்பையெல்லாம், தள்ளற்க நான்சொன்ன படியேயீயுஞ் - சாதித்துக் கற்சுன்னத் தொழிலைப்பா ரு, கொள்ளற்க மற்றவெல்லா முப்பேயல்ல - கூறுகின்றமதிவெண் பா நூலும்பாரே. (ஙங)

## கல்லுப்பறிதல்.

நூறான வுரோமருஷி லயந்நூறும்பார் - நானுமதி லறிய
வென்று விந்நூல்பாராய், சாறான முப்பதிலே வைகபாகங்கள்-சவுமி
யமாஞ் சாகரத்திற் காலேப்பாராய், பேறான விந்நூமற்ற நூல்களெ
ல்லாம் - பேசாது கருக்குருவும் பிடித்தகன்றாய்ச், தேறாது சிலவுப்
புத் திறந்திடாது - செய்பாகங்கைபாகஞ் செப்பிடாதே. (௩௪)

செப்பினே னுப்பினுட் செய்கையெல்லாஞ் - சிலவுப்பே முத
லஞ்சுஞ் சேரச்சொன்னேன், உப்பெல்லாம் வழலையென்று சித்தர்
சொன்னா - ரோகோகோ நிலவுப்புத் தானுமொன்று, தப்பில்லாக்
கல்லுப்புத் தானுமொன்று - சாரமெனும் பூரமாம் வெடியுப்பொன்
றே, அப்பனே யிவைகளெல்லா மாதியுப்பா - மவையுடனே சிலவு
ப்பா மதுவுமொன்றே. (௩௫)

அதுவென்ன சிவசுன்ன மாகாசத்தை - யடக்கினா லெடுப்பதற்
கரிதாமென்று, விதியுடனே சொன்னக்கா லெடுத்திடாரோ - மே
தினியிற் சித்துவித் தாரமென்றே, உதவிசெய்வார் தங்களைப்போ
னாலுண்டாக்கி - யொளித்திட்டாரொன்றான வுப்பைத்தானே. ()

ஒன்றான வுப்பொன்று தீட்சையொன்றென் - றொளித்தாரே
பரிபாடைக் குட்புதைத்தே, எண்ணாயிரத்திரட்டி திருமந்த்ரதத்தை-
யிருநூறுத் திருமூலர் பாடிவைத்தார், வண்ணான்ற னுப்பைவெளி
யாகச்சொன்னான் - மறுவிலொரு நிறைமறைவா யுரைத்தார்சித்தர்,
கண்ணாம்பைச் சுத்திசெய்ப நீருஞ்சொன்னார் - சுத்தவுப்பை யெடு
க்கும்வகை சொல்விடாதே. (௩௭)

சொல்சட்டை முனிவரிரு நூற்றிற்றீட்சை - தோன்றுமென்
று மொழிந்தாரே தோடந்தோடம், வல்லவராற் றீட்சைமொழி பட்ட
போதே - மற்றவர்கள்சொல்வதற்கு வாயுண்டாமோ, சொல்லுமகா
வாக்கியந்தான் கொங்கணன்றான் - செப்புகின்ற நூலெல்லா முப்பே
யென்றால், வெல்லரிது நந்திநிகண் டொருமூந்நூற்றில் - வெருட்டி
னார் மிகச்சற்று மின்னினாரே. (௩௮)

மின்னினார் மச்சமுனி நூன்மறைப்பு - வெட்டவெளி சவுக்கா
ர மென்றேசொன்னார், தன்னிமைபோற் போகருமே காரசாரந்-தா
னென்றே பேசினார் தப்பில்லாமல், கன்னன்மொழிச் சிறுபிள்ளைச்

சுந்தரர்தாய்-களிச்சுன்ன மென்றுசொல்லிக் காட்டிவைத்தார், பின்னுமற்ற சித்தரெல்லாம் வழலையென்று - பேசினர் பரிபாடைப் பேதத்தானே. (கூகூ)

பேதத்தைக் காண்பதென்றோ கற்சுண்ணாம்பைப் - பெரியசுத்து வாங்கிமுன்னே பிரிப்பதென்றோ, தாஹற்ற மதிசாரந் தன்னிற்றாக்கிச் - சமுத்திரமாஞ் சிவகெங்கை சார்வதென்றோ, சூதத்தைமணியாக்கி யேமபீசஞ் - சூட்டியொருகுருவாக்கித்தொழில்பைம்பொன், வாதத்தைக்காண்பதென்றோ காயசித்தி - வாகாகச்செய்வதென்றோ வயசுநூறே. (சுயி)

நூறனவயசதிலே யைம்பதாண்டு - நோக்கமில்லா நித்திரைக்கு ளொடுங்கிப்போகும், கூறனபாலர்முதற் பதினாறாண்டு - கொள்வார்க்கறிவில்லாப் பருவமாகும், நேரானமுப்பத்து நான்காமாண்டு, நிறைந்தவர்க்குச் சுகதுக்க நினைப்போகோடி - பேறனவிதிலெந்த நூலைப்பார்ப்பீர், பேய்மக்காள் ஞானகுரு பின்செல்வீரே. ()

பின்சென்று நிழல்போலத் தொடர்ந்துகாத்துப் - பேசாதமவுனரகசியத்தைக்கேளும், முன்சொன்னவழலையுப்பைப்பிறகேகேளு-மூலவிந்து வாசியின்றன் முடிவைக்கேளும், தன்செயல்விட்டுன்செயலிற்றனித்துநில்லுஞ் - சாத்திரமாங்குப்பைகளைத் தள்ளிப்போடும், என்சொல்லு மைந்நூறு மிணங்கிப்பாரு - மிணக்கமறிந் திணங்கியிரு மிகத்திற்றானே. (சுஉ)

இகத்திலுற்ற முடியுப்பை யெடுக்குமார்க்க - மெள்ளளவுஞ் சொல்லாமற் சித்தரெல்லாம், மகத்துவமாம் வழலைநில வுப்பேயென்று - வழுத்தினர் சவுக்கார வைப்புமார்க்கம், சுகமதாச்சிவசுன்னநிலவுப்புக்குட் - டோற்றுமதனலதனைச் சுத்தியாக்கப், பகுத்தசிப்பியண்டநீர்தேசியூசி - பலபலவாஞ்செயநீசிற் பாடந்தானே. (சுங)

பாடமென்னப் புடமெரிப்புச் சுண்ணாம்புக்கல் - பாய்ச்சியேநீர் விடுதல் சுடரில்வாட்டல், ஈடமென்ன விதனாலே சவுக்காரத்தி-லெண்ணெய்கக்கும் படிமுடித்தெடுப்பார்சுன்னம், நாடுமென்ற சுன்னத்தா லுப்பைக்கட்டி - நன்றானதாளகல் வங்கங்கட்டி, ஆடுகின்ற படிசேர்த்துச் சிந்தூரித்தே - யாறேழெட் டொன்பதுமாற் றுவோரே.

மாற்றுகுமிந்தமட்டுங் காணவென்றால் - வழலையுப்பு நிசமாக வைத்தாலுண்டு, காற்றானவழலைசவுக் காரந்தன்னைக் - கந்தல்கந்த

லாப்பிரித்துங் கசடாச்சொன்னர், கூற்றுனமன்னுக்குந் தண்ணீருக்குங் - குடிக்கவெண்ணெய் கக்காமற் குளிர்ச்சியிங்கார், பார்த்தாவதொன்றுமிகலே வண்ணானுக்குப் - பழஞ்சீலை வெளுப்பதற்காப்படித்திட்டாரே. (௪௫)

## பரங்கிசவுக்காரம்.

படித்திட்ட வுலகத்தார் மகாசினத்தார் - பரங்கிசெய்த சவுக்காரம் பண்பன்றுமால், தடித்திட்டநிலவுப்பைக் குறுக்கிப்போட்டான் - சாரமதில் வெடியுப்பைத் தள்ளிப்போட்டான், வெடித்திட்ட கல்லுப்பைக் குளிரப்போட்டான் - விறுனை கற்சுண்ண மிகவும்போட்டான், எடுத்திட்ட வெண்ணெய்க்கை மிதக்கவிட்டா - னென்னசொல்வே னுண்டைமிக வெடுப்பாச்செய்தான், மடித்திட்டபுத்தியினுன் மயங்கிப்போனுன் - மாறுட்டமாச்சுதிந்த வழலைதானே.

வழலைமுறைவரிசையாய்ச் செய்தாலுந்தான் - மக்களேதங்கம் விட்டால் வன்னமில்லை, விளைவென்று சொன்னதென்னவாகாசத்தில்-விந்தென்றவிசனுப்பை விட்டதாலே, தொழின்முறையாய்முடித்துவைத்த வழலையையா - சொர்ன்னமல்லாற் சொர்ன்னமுண்டு சுயம்பேயானுல், பழமென்றசலையடா விசன்விந்து - பட்டவிடந் தொட்டவிடம் பசும்பொன்னுமே. (௪௭)

பசும்பொன்னே மாற்றதிகமாணியில்லை - பருகினுலாழிகண்ட பாமனுவீர், விசும்பென்ற வரதாசவுப்புப்போயின்-வெடியுப்புநிலவுப்பும்விறுமையா, நிசமாகச்சொல்லவில்லை சவுக்காரத்தி - னெடுநாளாய் நிருழைந்து நின்றாலும்மே, நசையிரசம் வேதையிட முடியாதையா - நல்லபுத்தியுங்களுக்கா நான்சொன்னேனே. (௪௮)

நான்சொன்னே னென்றெண்ணி விடவேவேண்டா - நந்திசருமாமருவி யைந்நூறும்பார், வான்சேர்ந்தவுப்பெடுக்க வகையையைச்சொன்னான் - மறதிகொண்டு மாய்வதுதா னென்னேயுப்பில், தான் சொன்ன படிகுவித்து நீதான்பார்த்தாற் - சாண்வயிறு வளப்பதல்லாற் றவக்கிட்டாது, என்சொன்னே னிவ்வளவும் புலத்தியாவல்-வியமனைக்கோன்றெந்நாளு மிருக்கவன்றே. (௪௯)

இருக்கவன்றோ பிரமவித்தைச் சிவமாஞ்ஞான - மேடுங்களென்றே பாடிவைத்தேன் கடைக்காண்டத்தில், குருக்கொளொருபுத்தியுனக்கிருக்குமாகிற் - கூற்றென்னுஞ் சமுசார வலைக்குட்பட்டுப்,

பெருக்கமா யுண்டுடுத்துச் சாதற்கேது - பிரமையுனைத் தொடராமற்பேசக்கேளு, தருக்கொளுயர் தாறுவன்ன வழலைப்போக்குத் - தணையுபைப்பே னதையறிந்து நீசெய்வாயே (௫௰)

செய்யவே வழலைவிட்டோன் றருசகாணான்-செயமானதுருசு விட்டோன் பொன்னைக்காணான், மெய்யான வேமப்பால் விட்டானால் - வீணாதுஞ்சு கமுதற் பாடாணங்கள், சையோகரசபீசமில்லா வேளை - சாதகமாவொன்றுமுதலைஞ்சுகாணும், நயாரப்புடத்தில் வைக்கப் புனைவதன்றிக் - காரியம்போலதிலே கழன்றுபோமே. ()

## பூநீர்த்தீட்சை.

கழன்றுபோகாதபடி வழலைமார்க்கம் - காட்டுகிறேனச் சற்சனம் படிதானென்று, தழைந்தோங்கும் படிநல்ல வமுரியெட்டிற் - றானைத்துக கலக்கிவைப்பாய் தாழ்வில்லாமல், குழைந்துபோகாத படி தெளிவைவாங்கிக் - கொட்டப்பா தீட்சைசெய்த புட்பமெட்டும், முழன்றுபோகாமலே கலக்கிக்கொண்டே - யுத்தமனே செயுமவகையை யுரைக்கக்கேளே. (௫௨)

கேளப்பா மேலான தீட்சையுப்புக் - கிரமமதாப் படியிட்டுக்கிண்டிப்போடு, ஆளப்பா தீட்சையென்ன வென்பாயானா - லறைகடலினுப்பன்றோ வாயினாகம், தூளப்பாகடைவது பங்குனியின்மட்டும் - துரிதமா ரவியில்வைக்க வுப்பேயாகும், ஆளப்பா வுப்பெடுத்துத் தேறிப்பார்த்தே - யடியினடு வெடியுப்புமுடிமேல் வையே. (௫௩)

## வெடியுப்புத் தீட்சை.

மேலான முடியிலைஞ்சு பலமேயாகு - மிச்சமதா வடியிலேபலந்தானெட்டுக், கோளானநடுவிணங்கன்படிதானென்று - கொட்டப்பாசமாதியிலே யிட்டுமூடி, நூலானமேன்மூடி சீலைசெய்த - நூறெருவிற்புடம்போட நீற்றுப்போகும், மாளானவண்டநீரிட்டேயாட்டி - மகத்தானவில்லைசெய்து புடத்திற்போடே. (௫௪)

புடம்போட்டே யாறினபின்னெடுத்துக்கொண்டு - புதியவோர முரியிலே கரைத்துக்காய்ச்சித், திடம்பெற்றுக்கம்பியதாய்க் கட்டிப் போகுஞ் - செயவுப்பினைப்படிதான் றாக்கிக்கொண்டு, குடநிறைத்தவெண்ணெயோ ரளையாழாகிற் - குழைபடவே கலக்கிநன்றுவரை

த்துக்கொண்டு, தலங்காட்டும் வேகாதவழலைநீதான் - தான்காச்சி விட்டிடுவாய் தாழ்வில்லாதே. (ருரு)

இல்லாமற் போகாதே யெண்ணெயுப்பை - யெரித்துமெல்லக் காச்சிடவே யிருக்கும்பாராய், உல்லாசமாகவே யண்டம்போல-வுருட்டியேரவிமுகத்தி லுலரப்போட்டே, எல்லாருமித்தமுறை பாடமாட்டா - சிலைநன்ரு விசனுப்புக் கிடாய்ச்சொன்னேன் - எல்லவரா மச்சர்கொங் கணர்தாஞ்சொன்ன, வழலையித்த முறையில்லை மகிழ்ந்துபாரே. (ருசு)

## சவுக்காரம்.

பாரப்பா விப்படியே சவுக்காரத்தைப் - பாடாமன் மறைத்தாரே வழலைமார்க்கம், நீரப்பா நிலவுப்பே வழலைக்காதி - நின்றதினுற் றுநசைமுந்திக் கொல்லுங்கொல்லும், பேரப்பா துருசாலே சூதங்கட்டும் - பேய்மக்கள் சூதத்தாற்றங்கசீறும், தாரப்பா தங்கமிட்டசிந்தூரத்தைத் - தாக்கினு லேஞ்சதுவுந் தப்பாதன்றே. (ருஎ)

தப்பாமல் வழலைசவுக் காரசுன்னஞ் - சமுசயங்க ளில்லாமல் வெளியாய்ச்சொல்வேன், மெய்ப்பானகும்பிடுங்கற் சுன்னமார்க்கம்-விள்ளாதே மறைத்தாரே சித்தரெல்லாம், அப்பாகேள் கிளிஞ்சிலெனுமுறைமைதன்னை - யடைவாகச் சுத்திசெய்யும் வகையாதென்றால், உப்பானவுவருடனே கற்சுண்ணம்பை - யுணர்வாகத்தண்ணீரிற் கலக்கிக்கொள்ளே. (ருஅ)

## கிளிஞ்சிற்சுன்னம்.

கலக்கியதிறுமைவிட் டெரிப்பாய்நீயே - கன்மஷங்களொருசிறிதுங்காணுதோம், வலுக்கமுத்துவீரமுடன் சினஞ்சூடன்-வளருறவே நவாச்சாரங்கல்லுப்போடு, பெலக்கவே வகைவகைக்கோர்பலமதாகப் - பிசகாமற்கிளிஞ்சிலேஞ்ச பலந்தானையா, இலக்கமுள்ள வண்டநீ ரெருக்கம்பாலின் - றெளிவுவிட்டு முன்மருந்தைத் திடமாவாட்டே. (ருகூ)

ஆட்டியேசிப்பிக்கு மேலுங்கீழு - மப்பிப்பின் ஞமெழுவிற் புடத்தைப்போடு, நீட்டியவோர் சுன்னமுமா மந்தநீறதை-நினைவாகவேண்கருவா ளைத்தேயூது, காட்டியே கடுஞ்சுன்ன மாகக்கட்டு-காளைறதினமறைத்தப் புடத்திற்போடு, தாட்டிகமாக் கடுஞ்சுன்னஞ்சிப்பியாச்ச - சாதகமாவின்னுமொரு சுன்னஞ்சொல்வேன, கூட்

டனேயண்டங் களைத்துவங்கிக் - குணமானபிங்கான் பாத்திரத்தில்வைத்தே. (௬௰)

வைத்தவுடன் பழச்சாறு படிதாமென்று - வாகாகமுழுகவிட்டதனிற்றாய்மை, பெற்றதனின் ... மண்டும் - பொடிசெய்தே போகிட்டுப்பழசசாறூற்றி, குறையில்லாக் கடுவெயிலிலேமூநாள்வை - கூசாமலண்டமெலா முருகிச்சாற்றில், அத்தமென வுறைந்திருக்கு மெடுத்துக்கொண்டே - யண்டத்தின் சல்லெவல்லா மறைத்துப்போடே. (௬௧)

அறுத்தபின்பு மூன்றுநாள் ரவியிலிட்டே - யப்பனே யண்டத்தினீறுதன்னை, மறுத்தளிர்க்க கல்வமதி லிட்டேநனைரூய் - வளமானவெருக்கம்பால் வார்த்தேயாட்டி, குறிக்குமொருசாமமட்டு மரைத்தெடுத்தே - குணமாகவில்லைசெய்து ரவிற்போட்டு, செறித்தபின்பு மேன்மூடிச் சீலைசெய்து - சிறுபிள்ளையம்பதெருப் புடத்தைப்போடே. (௬௨)

சியிலே போட்டதனை ... குசன்றா..., அன்னவுமைக் கேயுரைத்தானித்தவித்தை - யம்மையுமென்றனக்கோதா வுரைந்திட்டாளே.

## வெடியுப்புத்திராவகம்.

சேரப்பாலிச்சுன்னந் தனக்குமேவகந்தா - னப்பனேயன்பாகச் சேர்த்தேயாட்டில், கூரப்பா கெட்டடங்கிப் பலக்சான்பத்துச் - சிமெனுஞ்சிப்பிநீர் கொடுஞ்சுறாக்கு, வீரப்பாவண்டவுபா சத்திலிடுப் வெடியுப்பைக் கட்டுதற்கு விக்காமிச்சீர், சேரப்பாலிந்நீற்றைநப்பதனம்பண்ணு - நிசமானவழலைமுறை நிகழ்த்துவேனே. (௬௪)

நிகழ்த்துவேன் முன்சொன்ன சவுக்காரத்தை - நிலைபெறுநற்சுன்னம் பாண்டத்திட்டு, மகத்தானமாஞ்சவுக்காரக் கிளியாய்க்கட்டி - வாகாகவைத்ததின்மேற் சுன்னங்கொட்டித், தெளிப்படிநீர் வாருபோக்கிநீருஞ் - சுகமாகநீரியபின் னெடுத்துக்கொண்டே, நிசத்தினிலே அறுதா நேசச்செய்யி - னென்மகனே சவுக்காரமென்புமாமே. (௬௫)

எதும்புபோலேயிருக்கு மெடுத்துப்பார்க்க - வெண்ணெய்கக் கிமேற்படர்ந்து கறுத்தேயிருக்கும், சிறுண்டா மல்லிகைப்பூச் சாறு

வில்லைபண்ணி யண்டத்தின் பொடிக்குள்வைத்து - மேன்மூடி
ச்சுண்ணாம்புச் சீலைசெய்து, நல்லவொரு பத்தெருவிற் புடத்தைப்
போடு - நலமானசுண்ணம்போல்வெள்ளையாகும், அல்சலிக்குமுன்னை
த்தசிப்பிச் செயநீரொன்று - மதைவிட்டுச்சாமமொன்றாட்டிப்பின்பு,
வில்லைபண்ணிக் காயவைத்து முன்னாள்வைத்த - விரானகிளிஞ்சில
ண்ட சுண்ணத்துள்ளே. (௭௨)

உள்ளானவீரமொரு கழஞ்சுபோட்டே - யூறவெருக்கம்பாலா
லரைத்துக்கொண்டு, தள்ளாதசவுக்காரவில்லைக்கேதான் - சாதகமா
ய்க்கவசமிட்டுச் சீலைசெய்து, மெள்ளவேபத்தெருவிற் புடத்தைப்
போடு - வெண்ணீறுபோற்சுண்ணம் விசயமாகும், துள்ளாதேவழலை
யின்றன் சுண்ணங்கண்டாற் - றுருசுதன்களிம்பற்றுச் சுண்ணமாமே.

சுண்ணமோ ரைந்தென்று முதற்காண்டத்திற் - சொல்லினேன்
சவுக்காரச் சுண்ணஞ்செய்ய, வன்னமென்ன வைத்துசுண்ணங் குகை
யாப்பண்ணி - வழலையைத்தான் கிளிஞ்சிலண்ட செயநீராட்டித், தி
ண்ணமாக்குகைக்குள்வைத்துப் புடத்தைப்போடு - சிவசிவா கடை
சியிலே செயமாஞ்சுண்ணம், அன்னவனுமைக் கேயுரைத்தானிந்தவித்
தை - யம்மையுமென்றனக்கோர் வுரைத்திட்டாளே. (௭௪)

## வெடியுப்புத்திராவகம்.

அரைத்திட்ட வெடியுப்புத் திராவகந்தா - னப்பனேயன்பாகச்
சொல்லக்கேளு, திறம்பெறுநல் வெடியுப்புப் பலந்தான்பத்துச் - சி
னமதையிணங்கனுக்குச் சேர்ப்பாயொன்று, உரைத்திட்டசவுட்டுப்
புப் பலந்தானென்றே - யுத்தமனேவெண்காரம் பலந்தானொன்று,
அரைத்திட்டகல்லுப்பு மிணங்கூன்சேரா - வரிபசீர் வழலைபலங்காலா
மன்றே. (௭௫)

காலாகுத்துருசுவெள்ளை யன்னபேதி - கமகமென்று பரிமளிக்
குங்கற்பூரந்தான், நாலானதீட்சைபெல்லாம் வகையொன்றுக்கு - ந
ன்றாகவொருபலமா நிறுத்துக்கொண்டு, சூலானசிப்பியோ டுருவியுப்
புந் - தூக்குவாய்பலமொன்றுத் துகளினல்ல, மாலானமருந்தெல்லா
ம் பொடித்தொன்றாக்கி - மைந்தனேகுப்பியைப் பங்குமாட்டே.()

மாட்டியேயடுப்பேற்றி பெரிசேர்பாக - மைந்தனேமேற்குப்பி
வாய்மூக்கானிர், ஊட்டியேபுகையுடனே வடியுநீரை - நினைவாகப்பி

ஞ்ஞானி னோராவர்க்கு, தொட்டமாய்வழலையிட் டெரிக்குமிந்நீர் - செப்புகிறேன் வழலைக்குத் தீட்சையாகும், தாட்டிகமா யிருப்பன்சாஸ் வயிறல்லாமற் - சமுத்திரமெல்லாம் வயிரோசண்டிமாடே. ()

மாடேகேள் வழலைசவுக்காரச்சுன்னம் - வகையாகக் கைம்முறையாவைத்துக்கொண்டு, நாடோடேயிருந்து வாழவேண்டி - னல்லசவுக்காரமெனுஞ் சுன்னத்தாலே, கூடாததுருகிலுப்பை முன்னே கட்டிக் - கொண்டுநல்ல குநத்தைக் குளிகையாக்கித், தேடவே செந்நிதய்க காகஞ்சேர்த்துச் - சிந்தூரஞ்செய்துநவ லோகத்திவாய். ()

நவலோகமொன்றுக்கு வொருமாவிந்தா - ளுலாறுமாற்றுகுநல்லவேதை, பூலோகத்திருந்துபெண்டிர் பிள்ளையோடு - போசனங்கள்செய்துவழிற் புத்தியுண்டாம், தவமானயோகநிட்டை கஃயகற்பந்-தன்னிலே மனதுவைத்துச் சார்ந்தாயாகிற், சிவமான வாகாசவுப்பைத்தேடித் - தேகசித்தி முதலிருபத்தைந்துஞ்செய்யே. (௭௯)

## இருபத்தைஞ்சுசித்து

செய்கின்ற சித்திசெடீரநூறுகைக்குள் - சித்தருக்காமென்று சொன்னபொதிகைத்தேவே, ஐயமிலாதடியேனுக் கருள்கிவ்வன்ன-வதன்பெயரைச் சொல்லுகிறேன் புலத்தியாகேள், மெய்யான சிவதீட்சை சத்திதீட்சை - வேதாந்தஞ் சித்தாந்த மோனுங்கீழும், உய்யவேமந்திரசித்தி மவுனசித்தி-யுண்மையுடன் காயசித்தியுடனிகேளே.

உடனுனவெட்டெழுத்து மஞ்செழுத்து - முற்றவாதாரசித்தி பிரசாதசித்தி, திடமானவான்மசித்தி தத்வசித்தி - தேகசித்தியாதாரசித்தியோடு, குடமானகுளிகைசித்தி சொரூபசித்தி - கூறரியதந்வபிரசாதசித்தி, படலானவாதசித்தி யோகசித்தி - மகிழ்வரப்பிரசாதசாம்ப வத்தின்சித்தி. (௮௧)

சித்திதரும் போதசித்தி சாலசித்தி - திறமான ஞானசித்தி யிவைதானியா, முத்திதனைத் தருமிருபத் தைந்துசித்தி- முதன்மையாஞ் சித்தர்களுக் கெய்துமெப்போதும், இத்தனையுஞ் சித்திக்க வேண்டுமென்று- வீசனுப்புஞ் சிவனுப்பு மெடுத்தாவ்வாய்க்கும், புத்தியிலாதட்ல்வளர்க்க வேண்டுமாயின் - புகலுகின்ற சவுக்காரப் போக்கைப்பாரே. (௮௨

## சிவசுன்னம்.

போக்கற்ற சிவசுன்ன மில்லாக்காரம் - பொன்றருமோ வென்றெனீ புகழ்ந்துகேட்டால், வாக்காரச் சொல்லுதற்கு மனமோவில்லே - மலேயிலுள்ளசித்தர்கட மறைவுக்காகத், தாக்கான சவுக்கார வழலேயென்று - சாற்றினதேயல்லாம னிசமேயன்று, நீக்காமற் சிவவுப்பைத் தின்றேமென்று - நிலவுப்பைத் தின்னும னிசழ்த்திஞரோ.

ஆரணிக்க வேணியுடைச் சிவனுருப்பை - யன்றைக்கே நின்றுவிட்ட தடியாமுப்பூ, நீரணிந்த சிவவிந்தைச் சத்தியுண்டு - நிசமில்லா வளையலுப்பைப்பெற்றுனிலி, வாரணிந்த சத்தியேதாயுமானுள் - வளையலுப்பைப் பிள்ளையென்றுன் மரித்துப்போச்சு, கூரணிந்தவா காசவுப்பைக்காணக் - குடிலிலிட்டுக் கும்பமெனுமாளென்றுளே.()

குப்பு[illegible]மாசியார் திங்களேபங் - குனியிடப மேடமாங் [illegible]ருசுன்னம், [illegible]யமானபதி[illegible]மன் [illegible] இரியவேண்டாம் - பாலசித்துங்கொடுக்கின்ற [illegible]சுன்னம், நவசுன்ன [illegible]சுமைநில [illegible] துப்பாரு - மேலெழுந்த வூசரத்தி னுணுக்கம்பாரு, அம்[illegible] னமிடுஞ் சத்தம்பாரா - யறிவதற்குக் கடையிலேத்தாங் காண்டம் பாரே. (அரு)

## குருமுடிக்கும் வகை

பாரப்பா சிவசுன்னம் பண்ணுமார்க்கம் - பாடுகிறேன் குருமுடிக்கும் பாகந்தன்னை, வூரப்பா வெளிதிறந்து சொன்னிராலு - லொருபொருளுஞ் சித்தியா துரைத்தேன்சாபம், சிரப்பா நற்சிடனுநற் சொல்லு - தெளிவானே விந்நூலைத் திறந்துகாட்டுக், கூரப்பாவறியானுக் கீந்தாயானுற் - குற்றமுள்ள வெழுநரகிற் குடியாவாயே. ()

குடியாகப் போகாம லிசன்வித்து - கூறரிய திலவுப்பின் கூட்டம்பார்த்து, அடியொடுகல் லாமற்காண் டந்திற்சொன்ன - வடையாளப் படியெடுவா காசவிந்தை, இடியோடே பிறந்தவன்னிமிருதியாவுன் - டெடுப்பானே யெடுக்கின்ற வெடையாதென்றுல், படிமீதிற் பணவெடையா முப்பினுலே - பாய்ச்சலாம் பூமியெல்லாம் பழுக்குமன்றே. (அஎ)

பழுக்கவே வெளுத்துப் பாகுஞ்சுண்ணம் - பாலகனே பணவெடைதான் பார்த்தெடுத்துச், சழக்கில்லாப் பொருளெல்லா மாயினுந் - தானறியப் பாறையப்புத் தடையில்லாமல், கொழுக்கவே யெண்கழஞ்சு ராதநாழி - கொண்டுவந்து பாறையப்பைக் குணமாச்சேர்த்து, வெளுக்கவே கடைந்திரைக் கோர்நாள்மட்டும் - வெயிலில் வைக்க வாடைகட்டி மிதக்கும்பாரே. (௮௮)

மிதக்கின்ற வாடைதனை யெடுத்துப்போட்டு - மிகுந்தநீர் முழுதும் பிங்கானில்வார்த்து, மதிக்கின்ற பனியிலேவைப்பாய் சந்திரனின் மைந்தனே மூன்றுநா ளானபின்பு, துதிக்கின்ற சுத்தவெண்மை நீர்போலாகும் - துளியதை வாயில்விட்டாற் கைத்திடாது, கதிக்கின்ற விந்நீர்மற் றொருபிங்கானிற் - கவனமாக விட்டபின்பு நிகழ்த்தக்கேளே. (௮௯)

நினைவரிய வாதாய சிவனார்வித்து - நிலவுப்[illegible]திருந்த நிசக்காரத்தான், கனமா[illegible]ற்பக[illegible] [illegible]பணைந்த ன்றாக்கிப், பனிபதனில் வை[illegible] மதிய[illegible] [illegible]கருளே - பணிவிடையா முப்பிட்டி ரவிமுன்பாகத், தினமொருநா ழிகைவைக்கத் தயிர்போற்காந்த - செலந்திரன் டிராவிகனிற் றீக்கமாமே. (௯௰)

நீக்கமாய் வயிரம்போற் கட்டிப்போகும் - நிரண்டமுத்து மணிபோலே திரட்சியாகும், பார்க்கவே கண்கூசும் வயிரம்போலே - பரமசிவ னுப்பினது பழக்கத்தாலே, மார்க்கமா யிதனையெடுத் தைஞ்சுசுன்னம - வளர்குகையில் வைத்ததின்மேற் சிலைசெய்தே, ஏற்கவே கவுதாரிப் புடத்திற்போட்டா - லீசனுப்புச் சுன்னமதா யிருக்குந்தானே. (௯௧)

இருக்கின்ற சுன்னமன்றோ வழலைச்சுன்ன - மேமமதையுண்டாக்கு மீரன்சுன்னம், திருப்பொதிந்த காரசாரத்தின்சுன்னஞ் - சிவசிவாவண்டபிண்டந் தெளிவாஞ்சுன்னம், பெருக்கின்ற சத்திசிவஞ்சேர்ந்தசுன்னம் - பிரபலமாந் தாயின்வித்து சேர்ந்தசுன்னம், உருக்கினத் துக்காதிபெறு முனாச்சுன்ன - முற்றமன்றுந் தண்ணீருமுறுதியாமே. (௯௨)

உறுதியாச் சூதத்தைக் கட்டுஞ்சுன்ன - மொப்பிலாத் தாருகை
முந்தி நீற்றுஞ்சுன்னம், மறுவிலாத் தங்கத்தை யாட்டுஞ்சுன்ன - மா
ற்றேவி திமிரைத் துவைக்குஞ்சுன்னம், பருதிபோற்காயசித்தி பண்
ணுஞ்சுன்னம் - பாங்காகக்கமனமிட்டுப் பாயுஞ்சுன்னம், அருகிமுடி
யமைமிருத்துத் தட்டுஞ்சுன்னம் - துகளிலது பூரணமென் றியம்ப
லாமே. (௬௩)

இயம்புகின்ற பாடாண மெட்டெட்டுந்தா - னென்மகனே சுன்
னமதா லிளக்குஞ்சுன்னம், பம்பெரவேயுபரசநூற் றிரண்டுபத்
துப் - பம்பரம்போ லாட்டுவிக்கும் பரமாஞ்சுன்னம், களிப்புறையு
மூலோகங்க ளனைத்துந்தங் - களிப்பற்றுப் படிநமதாக்கட்டுஞ்
சுன்னம், செயப்புகலு மலைமாமன் செடிபூண்டெல்லாஞ்-செம்பொ
ன்னுச்செயும்பரம சிவசுன்னம்மே (௬௪)

சிவசுன்னந் தட்சிணமூர்த்திமுன்னஞ் - சௌனகாதி ருஷிகளுக்
குச்செப்புஞ்சுன்னம், தவமானபதினெட்டுச் சித்தர்க்கெல்லாஞ்-சக
லசித்துங்கொடுக்கின்ற சத்திசுன்னம், நவசுன்னந் துவாதசந்தை)
கடந்தசுன்ன - நாதாந்த குண்டலிக்கு ளொன்றுஞ் சுன்னம், பவமெ
ன்னுங் கடல்கடந்த ஞானதீபப் - பாஞ்சுடரா நின்றிலங்கும் பரம
சுன்னம். (௬௫)

சுன்னம்பிற் கடுகிலொரு நாலுபங்கு - சூதமொரு சேரத்தனி
ற்றூளினக்கால், அண்ணாந்துபார்த்திருக்கக் கிறுகிறென்றே - யாடி
யே மதமதனை யடக்கும்பாரு, அங்காந்து திரியாதே யந்தச்சூத - ம
னுவளவு மலையளவி லெடுத்துப்போட, விண்ணோக்கு மேருவைப்
போன் மாற்றுக்காணும் - வேதைகளின் றுறைகோடி. விள்ளொ
ணாதே. (௬௬)

விள்ளவேவக்கியுடைச் சூதந்தன்னில் - வெந்தியமவ்வளவெடு
த்துப்பாவிற்போட, வெள்ளைநிறப் பாதிரண்டே புறைந்துநிற்கும்-
வெள்ளமுறை மூன்றுதினந் தின்றுயானால், கள்ளமன்று தேகந்தா
னருணன்போலாம் - காயசித்தியோகசித்தி கைக்குள்ளாகும், எள்ள
வும் பிசகில்லை யூழிகால -மிறப்பின்றிச் சூதமுண் டிருக்கலாமே ()

இருக்கலாம் வெஞ்சமனு மேவல்செய்ய - விவ்வுலகுமவ்வுலகு
மென்றும் போற்றப், பெருங்கலாஞ்ஞைகலை வாழ்சிசன்பாதம் - பெற்

றிடலாஞ் சித்தருடன் பேசலாகும், நெருக்கமுறு மாயிரத்தெட்டண்டத்தன்மை - யிட்டத்திற் சுற்றிவந்து நிலைக்கலாகும், முருக்கலாமீசனுப்பு முருக்கேயல்லால் - முக்தமே மற்றவுப்பின் முடியாதாதே. (௬௮)

ஆறான விரண்டாங்காண்டத்துக்குள்ளே - யருவமுலைக்குருச்செய்யு மார்க்கஞ்சொன்னேன், கூறானமுப்பதினிலே கற்பமூலங்-குணமானவெடைபஞ்சீ காணஞ்சொன்னேன், மாறிலாதான்கிளிலே யோகஞ்சொன்னேன் - மாசிறுப்பெடுக்கும்வகை யைஞ்சிற் சொன்னேன், தேறுவாயுப்பெடுக்கும் வகையைநன்றாச் - சிரானவிந்நூலாற் சிவமுண்டாமே. (௬௯)

## இரண்டாங்காண்டம்

முற்றிற்று.

---



உ

கணபதிதுணை.

# அகத்தியமுனிவர்

அருளிச்செய்த

# பரிபாஷைத்திரட்டு.

## மூன்றுங்காண்டம்.

### காப்பு.

சிவமானபூரணமே நாதவிந்து- சின்மயமாநின்றவொரு பரமேயாதி, உவமானமில்லாத பரந்தனக்கே - யுறவாகிநின்றவொரு நாதமஞ்சு, நவமானநாதவிந்தி ரண்டுமொன்றாய் - நன்மைசெறிபரிதிமதிசுடர்களான, பவமறுமிந் நூன்மூன்றுங் காண்டத்திற்கப் - பராபரனுமைங்கரனே காப்பாமன்றே. (க)

காப்பானவிந்தநூன் முற்றும்பார்க்கிற் - கைகாட்டு மாரியன்போற் காட்டுங்காட்டும், கோப்பானசாகாத காரூனன்மைக்-குணத்துயர்ந்த புலத்தியவசரமாமென்று, நீப்பரியபரிசுத்த வமுதகங்கை-நிலைபிறந்த பூவழலைமுப்பூமார்க்கம், மாப்பெரியவிந்நூலி னூற்றுக்குள்ளே - வளர்நடஞ்செய்பராபரமாஞ் சோதிதானே. (உ)

சோதியாய்நின்றவழி தீட்சையெல்லாஞ் - சொன்மறைவோவொன்றுமில்லை யைஞ்சாங்காண்டம், வாதிபாம்வாமமது தீட்சைதீட்சை - வாமமென்றநாதமது பூமிநாதம், வேதியாநாதவிந் தண்டபிண்டம் - வேதமதுநால்வேத மாறுசாஸ்திரம், ஆதியாநாதவிந்தப்பப்பைய: - வரகராவிதிற்பிறந்த வண்டந்தானே. (ங.)

## பஞ்சிகரண தீட்சை.

அண்டமெனிலண்டமன் றுதியண்ட - மகாசம்பிருதவிதன்னி
ர்போக்கற்ற, பண்டமெனிற்பண்டமன்று பரமேசோதி - பகராத
பொருளையா நந்தியாவட்டம், கண்டமெனிற்கண்டமன்று கல்லுகல்
லு - கருவாகியுருவாகி யைஞ்சரம்பிண்டம், தெண்டமென் றுநினையா
தே நந்திக்கல்லு - தெளிவானபிருதுவியா லொன்றுமாச்சே (ச)

ஒன்றானபிருதுவிபத் தயிர்தானேரோன் - றேகோகோவப்பி
னாந் தச்சிரண்டாம், வன்மைமிகுதேயுபத்துச் சிவன்மூன்று-வகை
யானவாயுபத்துச் சிவனான்காம், அந்தரம்பத்துச்சிவனேணாங்தென்
ப-ராகரபஞ்சிகரண தீட்சையாச்சு, பன்னரியபூதவழிபிரித்துச்சொ
ன்னேன்-பகரார்களாகாச வுப்பைத்தானே. (ரு)

## நாதவிந்து அண்டபிண்டம்.

உப்பென்றுவுப்புமுதற் கற்பூரந்தா - னுடனிருந்தாற்குமரிகறி
சமைப்பாளன்றே, அப்பென்றலப்பதினு லுப்புண்டாச்சு-தரகரவு
ப்போடு புளியிலைதேயாச்சு, தப்பென்றதீட்சைதச தீட்சைதானே-
யறைவாதமொருவரா லறியப்போமோ, மப்பென்றுலிரண்டாங் கா
ண்டத்தின்முப்பூ - மாசிலெந்தாங் காண்டத்தின் மறைப்பிராதே. ()

மறையாமல்சவுமியசா கரமுங்காணு - மதிவழியேதானறிந்து
தீட்சையோது, கறையற்றதீட்சையில்லாப் பாதகர்க்குக்- காணுதே
யொருநாளுங் கடினமாகும், மறுவற்றகற்பூர சோதியின்னல்-வாம
த்திலந்தியொளி காணலாகும், மறையாதசோதிகடந் தப்பாற்சென்
றுன்-மகத்தான கணபதியைக் காணலாமே. (எ)

காணலாந்துரியமொடு துரியாதீதம் - கனகமய சிதம்பரத்தின்
மேலாம்பீடம், காணலா மாறுக்கு மேலாம்பீடங்-காதலனேகணபதி
யு மெதிரிற்றோன்றும், காணலாங்கோடான கோடிபூசை - கருத்
தோடு செய்தக்காற் குருவைக்காண்பாய், காணலாம்வங்கென்றபூசி
த்தக்கால்-கருங்குழல் வல்லபைகல்வரமளிப்பண்மன்னே. (அ)

## கணபதிபூசை.

வல்லபையுங் கணபதிபு முன்னேக்கண்டு - மவுனமந்திர மூப
தேசித்தருள்வர்பாராய், அல்லறவிப்பொருளை வெளியிடாதே-யாம்

ஓம் ஊம் சிவாவெனயா னறியச்சொன்னேன், சொல்லரிய கணபதி யின் பூசைபூச்சு - துகளிலாப் பரப்பிரம பூசைதன்னை, விள்ளிது வேணபடி செய்யினுச்சி - வெடிதுமரித் திடுவையிஃ துண்மையா மே ௬

உண்மையா முறுதிகொண் டேற்றுப்பார்த்தா - லேகோகோ தெரியுஞ்சா காத்தினேர்மை, உண்மையாவங்கென்று வாசியாலே யு றக்கும்பித் திடிலொர்பாப் பிரமவாயில், பண்பாகப்பளிச்சென்றுதி றக்கும்பாராய் - பாலகனே பரப்பிரம வாயில்காணும், வண்மையா நாற்சாதி யிடமுந்தோன்றும் - வாவாவா வங்கென்று தம்பிப்பாயே.

## பிரமன்பூசை.

தம்பித்தே யிரேசகபூ ரகமுஞ்செய்து - சாற்றுநெற்றி நேர் மைசுழு முனையைமேவித், தம்பித்து வாசியையே ரிழுத்துவாங்கிச்- சதுராகக் கும்பத்திற் பாய்ந்துநன்றாத், தம்பித்தேயிடகலையிற் கும் பித்தக்காற் - சாற்றரிய பரப்பிரம சோதிதோன்றும், கும்பித்து வாசியைமேற் கொண்டெழுப்பிக் - கோதறநின் றிடிலொர்குருக்கா ணும்பாரே. (௰க)

குருவான சதுமுகனுங் கலைமாதுஞ்சேர்- கோடிரவிபோலநின் றன் கண்ணிற்காண்பர், அருவான வச்சபையிற் பீடந்தோன்று-மங் கென்று பூசித்துத் தரிசிப்பாயால், மருவாகி மலராகிப் பிரகாசிக்கு- மவுனமந்திரமுபதேசித்தருள்செய்வார்காண், கருவானகருவையா வ ரூபரூபங் - கண்டறிவாய் நமயவசி யரூபந்தானே. (௰உ)

அருபமா நாததரி சனமுமாச்சு - தரகரா பரப்பிரம பூசையாச் சு, சொரூபமாஞ் சங்கையில்லா மவுனமாச்சு - துகளில்சச்சிதானந்த வுருவுமாச்சு, தருபமாஞ் சாகரத்தி னேர்மையாச்சு - தானுன சொ ரூபத்தின் மூன்றுங்காண்டம், நிருபமாம் பூரகத்தைக் காணலாச்சு- நிகரிலாச் சதகோடி யுகங்கள்காணே. (௰௩)

## விட்ணுபூசை.

காணேநீபூரகத்தைக் கண்டான்மோட்சங் - காணுயோசொற் பனத்தின்மூன்றும்பீடம், வாழேநீமவுனசிவயோகியாகி - வழியான சபையையாவங்கென்றான் றி,:மாணேநீகும்பித்துத் தம்பித்தேநன்-

மைந்தனே யிரேசகபூரகத்தாலொட்டிச், சேணேயெங்கென்றேயொட்டிப்பார்த்தாற்-றெரியுமப்பா விட்டுனுவின் சோதிமாதோ. (௰௪)

சோதியா மவுனகுரு சோதியையா - சுடர்கோடி காந்தியிலே வாசிவேகம், நீதியாஞ் சோதியிலே யறிவையோட்டி- நினைவாகப்பார்த்தக்கா லொடுக்கங்காணும், பாதியாமொடுக்கமதிற்கும்பித்தக்காற்-பளிச்சென்றுவாயிலது திறக்கும்பாரு, சாதுவாமவிட்டுனுவோடணங்குகாண்பாய் - சமர்த்தாகவிருவரையும் பூசிப்பாயே. (௰௫)

பூசிப்பாய் கற்பூர தீபவாசம்-பூரணத்தின் மவுனமலர் சோதிசோதி, யாசிப்பா யவர்கடரி சனத்தைக்கண்டாலப்பனே கேட்டதெல்லா மருள்வர்பாராய், ஆசரிப்பாய்மவுனகுரு வுபதேசத்தை-யையனேயுனக்குய்யும் வகைசொல்வாரால், வாசிப்பா யுபதேசமுனக்கேசொல்லி - வண்மையுட னிதிற்கும் வகைசொல்வாரே. (௰௬)

திறக்குமப்பா வாயிலது மவுனத்தாலே-நினைவாக வாசிகொண்டு தம்பித்தக்கால், அறிந்துபா ரங்கென்று கும்பித்தேதா- னமுதமிழியிரேசகபூ ரகமேசெய்தால், பறக்குமதுசுழுமுனையில் வாயில்காணும் - பார்த்தக்கா லதின்பெருமை பகரொண்ணாது, சிறக்குமது சிகாரத்தின் வகாரசோதி - சிறப்பான சோதியிலே யறிவாய்நில்லே, ()

நில்லென்றுற் சம்மாதா னிற்கப்போமோ - நேரான சோதியிலே நினைவாய்கும்பி, அல்லலென்று லகாகதத்தில் ருத்ரன ருத்திரியவர்பெருமை யிவ்வுலகி லார்தாங்காண்பார், வல்லமையா லவரொளியைச் சொல்லப்போமோ - மகத்துவமா மதிகோடி பிரபைகாணும், எல்லென்று மவர்தம்மை மவுனமாக - வென்மகனே பூசிக்க முத்தியாமே. (௰௮)

பூசிப்பாய் வாசிமல ரர்ச்சித்தக்காற் - புகழ்பெறவே யுன்றனைக்கண் டுபதேசிப்பார், யாசித்துமவுனகுரு வுபதேசத்தை-யையனே சொல்லுகிறேன் வண்மையாக, ஆசரித்து நீசேரு வங்சிங்வங்மங்கரகாவ நாகதத்தின் மவுனமாச்சு, பாசமற்றுப் பரமபத சோதிதன்னைப் - பாலகனே பணிந்துநீ பூசிப்பாயே. (௰௯)

## மயேச்சுரபூசை.

பணிந்திடுவாய் சுழுமுனையின் பூசையாச்சு - பராபரமாம் விசுத்தியின்றன் பூசைசேரு, அணிந்திடுவாய் மயேச்சுரனை யைந்தாம்

வாயி - லறைவரிய மயேஸ்வரிதா னோங்காம்பீடம், அணேர்திடுவா யைங்கென்னும் வாயிறவ்னே - யானறிவனங்கென்று வாசிகொண்டு, * குணிக்திடுவேர்ய்கும்பித்துத் தம்பித்தக்காற் - கோடான கோடிரவி மதிகாண்பாயே. (உ0)

மதியான மதியையா ரவிதான்கோடி - மகத்தான நாதர்கட்டம் பரமவாயில், துதியான துதியையா துரியமேரு - துரியமாம்பதவியது மவுநவாசி, விதியானமவுநத்தின் வாசிகொண்டு - வினையமா விழுத்து நீ கும்பித்தக்கால், அதியான வதிர்ங்காண் வகாரசோதி - யரகராவங்கென்று கும்பிப்பாயே. (உக)

கும்பித்துத் தம்பித்து மேருபாய்ந்தாற் - குணமான வாயிலது திறக்கும்பாரு, நம்பிக்காண் சொல்லிவிட்டே னங்கென்றுந்தா-னன்றான விரேசகபூ ரகமுஞ்செய்தால், வம்பித்து வாசியதுக் கிடமாமைந்தா - வாயுவது வெழும்புமடா வண்டமட்டும், தம்பித்துவாசியைநீ தாண்டிப்போனாற் - றமவாயின் மூடாது தடைக்கட்டாமே (உஉ)

கட்டாமே மவுநத்தாற் கும்பித்தக்காற் - கைலாசங் கொள்ளாது புகைபோற்கப்பும், அட்டாமே யென்மகனே யண்டரண்ட- மங்கென்று கும்பித்தா லப்பாலோடும், மட்டாமே யிருந்ததினு லாவதென்ன - மவுனம்விட்டான் மாயையிலே மாண்டுபோவாய், சுட்டாமற் றம்பனத்தா லொட்டிப்பாரு - தடையறுக்கு மவுநத்தாற் றுண்டிடாயே. (உ௩)

தாண்டியே மனக்கண்ணாற் பார்க்கும்போது - சதகோடி பிரபையொளிர் சோதிகாணும், மாண்டவொரு மயேச்சுரன்றன் கொலுவிருக்கு - மகத்தான சபைவளர்மெஞ் ஞானவீடு, அண்டியேயவன்றன்னைத் தரிசித்தக்கா - லப்போதே மாயையெல்லா மகன்றுபோகும், தாண்டியே துரியமலர் கொண்டுபூசி-துரியத்தின் மயேஸ்வரியைத் தெரிசிப்பாயே. (உ௪)

தெரிசித்துப் பூசித்தாற் கும்பங்காணும் - தெரியாத மவுநமெல்லாந் தெளிந்தேபோகும், அருச்சித்துக் கும்பித்தாலமுதஞ்சிந்து-மாச்சுதையாவுபதேச மருள்வர்பாராய், பரிசித்துப்பாலமுத மூட்டுவார்பார் - பாலகனே சொல்லுகிறேன் மவுநவாக்கியம், நாச்சித்து நங்மங்யங் சிங்கென்றேநீ-நலமாகச் செபித்துநின்று தெரிசிப்பாயே.

* குணித்திடுவோயென்பது-குணிர்திடுவோயென விகாரப்பட்டது.

## சதாசிவபூசை.

நலமாகச்சொன்னேன் மயேச்சுரனுமிக்க - நயமாகமயேஸ்வரியும் பிரகாசிப்பார், வளமாகவிசுத்தியுடைப் பூசையாச்சு - வளராறுதாரத்தாக் கினையின்பீடம், அலையாமலாதார மாறும்வாயி - லாக்கினையிற் சதாசிவத்தின்சத்திபூசை, வளமாகவாசியைநீ யங்கென்றேதான் - மாட்டாறுதாரத்தின் வாயிறுனே. (உசு)

வாயிலஃதாதாரத் தாறும்வாயில் - வகையறியாச் சித்தர்களாற் றிறக்கப்போமோ, ஆயிலா தாரசிதம்பரத்தின்வாயி - லாயிரத்தெட்டிதழகனை யார்தாங்காண்பார், பாயிலதுபாயும்வகை பரிவாய்க்கேளு-பங்கென்றுவாசியைநீ தம்பித்தக்கால், பாயுமதுதோன்றுது மைந்தாசொல்வேன் - பகல்போலேதெரியுமா தாரம்பாரே. (உஎ)

பாரரியவாசியைநீ தம்பித்தக்காற் - பகரொணுவாறுதாரத்தேயுன்னை, ஆரென்றே கேட்பார்கள் சபையோரையா - வாக்கினையிற் றெரிசனத்தை யறியவந்தேன், தேரென்றுசபையார் மெஞ்ஞானவீட்டிற்-செப்புகரனுதிபற வாழ்விப்பார்கள், வாவென்று வாசிகொண்டு கும்பித்தக்கால்-மதிகோடிரவிமதிபோற் சோதிகாணே. (உஅ)

சோதியா மவுனசிவ யோகசோதி - சொற்பெரிய சோதியிலேயங்கென்றேநில், ஆதியாஞ்சோதிசொல் வெளிதோவப்பா - வாதாரசோதியிலே யண்டசத்தம், பேதியாதண்டபதி ரண்டமட்டும்-பேசரியசெயபேரி முழக்கக்காணும், நீதிசேர்நடனசபை யோகங்காணு-நிகழ்த்தரியபதினெண்பேர் பூசிப்பாரே. (உகூ)

பானையாவகமெனுநற் சகங்கள்காண்பாய் - பாலகனேயகத்தீசன்பீடந்தோன்றும், ஆனையா வறிவரகத் தியன்றனேர்மை- யறிந்தவனேமெஞ்ஞானமவுனயோகி, தேனையா சதகோடி யோகம்பார்த்தேன்-செப்பரியவகமதனிற் றெரிசிப்பாய்காண், சீர்பெற்ற மவுனகுருவுபதேசித்தார் - செம்மைமிகு குருபூசையருளினுரே. (௩௰)

அருளினுற்குருபூசை மவுனபூசை - யையனே விரோசகபூரகமுஞ்செய்தே, அருளினுன்மவுனகுரு பூசையையா- வதையறிந்தேன்சுப்பிரமன்ப னுபதேசத்தால், அருளினுற்சத்தசாகரங்களாச்சு-தரியசச்சிதானந்த மறிபலாச்சு, தருளினு லண்டாண்டமேறலாச்சு-தறைவரியவிப்பூசை யருளினுச்சே. (௩க)

ஆச்சுதையாவாசியைநீ யிழுத்துவாங்கி - யாதாரவாயில்கடந்த ப்பாலேயா, பேச்சப்பாகும்பித்துத் தம்பித்தக்காற் - பேறுன பனாவாயில்காணும்பாரு, கூச்சையாகமலமர் கொண்டேயேயுங்- குமாரகுரு பாதமல ரர்ச்சிப்பாயேல், ஆச்சுதையாவாசியினாற் பூசையாச்சு- தரகராதெரிசனத்தைக் காணலாச்சே. (கஉ)

காணலாமாதார பூசைசெய்தாற் - காயமதுபெலக்குமதற் சுழிவோவில்லே, மாணலா மாதார மாறுந்தொல்லே - வையகத்திலார்செய்வார் மவுனிதிய, வேணவாவற்றசிவயோகிஞானி - வேதாந்தகுருச்செய்வார் சித்தர்செய்வார், கோணலிலா வைந்நூற்றின் மவுநபூசை- குறைவறவேமுடிந்ததொரு செய்திகேளே. (கங)

கேளேயாவெத்தனே சொன்னாலுமெய்யாக் - கேடுகெட்டமானிடர்க்குவிவேகமில்லே, ஏனேயாவென்னூலின்மறைத்தவெல்லாமென் மகனே நினேவாகவிந்நூலபாரு, வாளேயாவாதார மாறுஞ்சொன்னேன்-மகத்தானவாசிவசிவயோகஞ்சொன்னேன்,பாழையாபனாவாயிற் பூட்டுச்சொன்னேன் - பரிவானமவுநத்தி னோட்டம்பாரோ. (கச)

ஓட்டமாந் துலாராசி சென்மக்கூறோ - டோகோகோ பாதத்தினொடுக்கஞ்சொன்னேன், ஆட்டமாஞ் சிதம்பரத்தி னடனஞ்சொன்னே-னகத்திலுப தேசமதை யடைவாய்ச்சொன்னேன், தாட்டிகமாச் சராசரத்தி னிலேயுஞ்சொன்னேன்- சச்சிதாநந்தவொளியறியச்சொன்னேன், ஈட்டமா மாயிரத்தை யாய்ந்துபார்த்தே - யிந்நூலேந் தாங்காண்ட மினிதாப்பாரோ. (கரு)

இந்நூற்றுனேந்நூற்றிற் சூட்சாசூட்ச-மென்னவித்தை சொன்னெனேயா வினிமேற்பாரு, அந்நூற்றுன் மதிவெண்பா வாதஞ்சொன்னே - னாறிவாரலேகடல்சூழவனிமீதில், மூந்நூற்றுன் சிவரத்னவொளியைக்கேளு-மூர்க்கமிலாக்குருநூலேம் பதையும்பாரு, உன்னிலேதா னிந்நூலிற் றிறமாச்சொன்னே- னுரைக்கின்றேன் பதினெண்பேர் சாபமன்னே. (கசு)

## சாபம்.

சாபமதைப் பதினெண்பேர் சித்தர்கூடிச் - சமர்த்தாக வேகவுபனிடத்திற்சென்று, பாபமிலாப் பரனருளாற் சாபங்கொண்டு-பாவித்தே னென்னூறுன பலித்திடாமற், சாபமென்றுலேந்நூற்றின் மவுநசாபம் - தாமிட்டார் யோகசிவப் பொருள்களெல்லாம், ஆகவென்றை யாயிரத்தி லநேகசாப - மருளினா ரதனுலோவியாதன்றே. ()

## சாபநிவர்த்தி.

பலித்திடவே யேகவுப விடத்திற்சென்று - பானருளாற்பரப்பிரமபாதந்தன்னில், பலித்திடவே பராபரத்தோ டொத்தியானும்- பரமவொளி யொக்கவிதம பண்பாய்க்கேட்டே, அலைக்கலெனச் சாபத்தை நிவர்த்திசெய்தே-யாயிரத்திந் நூலிதுகா ணென்றுசொல்ல, முலித்திடவேசாபமது நிவர்த்தியாச்சு- மூகண்டவுபதேசமுரைத்தார்பாரே. (௩௮)

பாரையாசாபத்தி னிவர்த்திகேளு - பாலகனே யிந்நூலானிவர்த்தியாச்சு, தாரையாவறிவனையா யிரத்தின்சொச்ச- மையனேயிந்நூலைந்நூறுந்தாம், சேரையாசிமகயவ சிறிங்உறிங்காச் - செபிப்பாய்நீ ஸ்ங்கிலியும் ஓம்ஆமென்று, மாறையா மநயவசிம றிங்கிறிங்கா- மகத்தானஹிறிங்சிறிங்ம சிகவென்றோதே. (௩௯)

ஓதவேபதினெண்பேர்சாபம்போச்சு-தோகோகோசகலசித்தர் சாபம்போச்சு, தேகமறலடமவுருநிவர்த்திசெய்தா-லென்மகனேசதங்கைகொஞ்ச நடனமாடும், போதவேசதகோடி ரிஷிகள்சாபம்-பெரம்மையன்றெனமகனே நிவிர்த்தியாச்சு, மாறவேமகத்தான சாபமெல்லா - மாண்டதையாவிந்நூலி னிவிர்த்தியாச்சே. (௪௰)

## இந்நூல்சித்தி.

மாண்டதேசாபங்க ணிவர்த்தியாச்சு - மகத்தானவைந்நூறும்பலிதமாச்சு, ஆண்டரியவாதார மாறுஞ்சித்தி - யையனேயாயிரத்தில் வாதஞ்சித்தி, மாண்டவொருவாதசித்தி சுமனஞ்சித்தி - வாழலாஞ்சிகம்பரத்திற் குளிகைசித்தி, காண்டபஃதண்டரண்ட பிண்டஞ்சித்தி-சாற்றரியவட்டகன்மஞ் சித்தியாச்சே. (௪௧)

சித்தியாம் பரிபாடை யிதுவேயாகுஞ் - சிவமானவைந்நூறுமிதுவேயாகும், முத்தியாமுந்நூறுந் தீட்சைசித்தி - மூலமாங்குருநூலைம்பதுவுஞ்சித்தி, சத்தியமாமதிவெண்பா நூறுஞ்சித்தி - தனிப்பூசைவிதியொரிரு நூறுஞ்சித்தி, அகதியா மைம்பதற்குன் முப்பூசித்தி-யரகராமுப்பதற்குட் குருவைப்பாரே. (௪௨)

குருவான நந்திசர் முந்நூறுஞ்சேர்க் - குணமான பஞ்சகாவியமுஞ்சித்தி, பரிவாகப்பதினென்றுஞ் சித்தியாச்சு - பாங்கான காவியத்தின் கருவாம்பீடம், அருவானகாவியத்தா தாரபீட-மாச்சுதை

யிரத்தொடைந் நூறுஞ்சொச்சம், துரிசற்றசொச்சமையா பூர்வக் கியானஞ் - சொன்னேனே யாயிரத் திருநூறுமால். (௪௩)

சொன்னேனு யிரத்திருநூ றதனிலேய - துவளில்வைத்தியத் தைக் கைபாகத்தோடு, முன்னமுந்நூற்றிற்செந்தூரஞ் சொன்னே ன் - மூர்க்கமறநூற்றிலுயர் பற்பஞ்சொன்னேன், வன்னமுள்ளவா யிரத்தைந் நூறுஞ்சொன்னேன்- வகையானவயித்தியத்தை வளமா ய்ச்சொன்னே, பன்னுகுணவாகடங்கள் பரிவாச்சொன்னேன் - பண் டிதர்நோயாளிகுண மறியச்சொன்னேன். (௪௪)

அறிவரிய பதினெண்கிற் பாவபுண்ணிய - மாய்ந்துணர்த்தே னென்மகனே யின்னுங்கேளு, செறிதரவீராயிரத் திருநூற்றுக்குட் - சேர்முத்திவயித்தியத்தை முழுதும்பாரு, பறிதவிலாச்சகலவகை ய தீகக்கோவை - பார்த்தக்கா லிதன்பெருமை பகரொண்ணுதால், இ றுதவிலாப் பன்னிரண்டி னூற்றிற்சொன்னே - னிந்திரமயேந்திர மாஞ் சாலந்தாமே. (௪௫)

சாலகவிலைந்நூறே டெண்ணத்தினுக்குஞ் - சாற்றறிரியவிந்நூலை நீகண்டாச்சொன்னேன், பாலபஞ்சபட்சி யைந்நூற்றிற்சொன்னே ன்-பரிவானசல்லியமோ நூறஞ்சொச்சம், சாலவொரு தொட்டியந் தொண்ணூற்றிற் சொன்னேன் - சாற்றுமோரெழுபதிலொட் டியத் தைப்பாரு, ஆலமெனுஞ்சாலத்தின் கோவையையா - வாயிரத்தோ டைம்ப தினைந்தாமே. (௪௬)

ஆமேகா ணதன்றொகையை யென்னசொல்வே - னதனிலொ ரு மூன்றுலட்சங் காப்பதாகப், போமேசிப் புலத்தியனேசொல்லக் கேளு - புகழ்மருவுசாத்திரத்திற் கிலக்கமில்லை, நாமேகாணிவ்வளவு ம் பார்த்துத்தேறி - நயமாகப்பொருள்படவே யுனக்குச்சொன் னேன், வாமேகா ணகத்தியன்வாக் கமுதவாக்கு - மாநிலத்திலாரறி வார் மவுனிக்காமே. (௪௭)

## வயிரவபூசை.

ஆமையா நூற்றொகையை யறிந்துசொல்ல - வம்புவியிலொரு வரா லாமோவாகா, ஆமையாலசிமநய வதீம்நதிமென் - றடைவாகம தீமென்று மாறுவாய்கான், ஏமையாவெண்கோணம் வளமாய்க்கீறி - யிடம்வலமாயிரேகையினூற் சூலம்போட்டு, நாமையாவெட்டெழுத் தைநன்றாய்மாறி - நலமாகவயிரவனைப்பூசிப்பாயே. (௪௮)

பூசிப்பாயமுதகும்பம் வைத்துநன்றுப் - புகழ்மருவுமவுநத்தின் மதனப்பாலும், யாசிப்பா யாயிரத்தெட்டிதழினாலே- யருச்சனைகள் செய்து கற்பூரசோதி, வாசிப்பாய் மவுநசிவ ஞானத்தாலே - மந்திர பஞ்சாட்சரததாற் றூபதீபம், நேசிப்பாய் வயிரவனைப்பூசித்தக்கா- னேராகப்பளிச்சென்று சோதிகாணே. (௪௯)

## சுப்பிரமணிய தியானம்.

பளிச்சென்று சோதியெதிர் கண்டதானுற்- பயிரவனுந்தோன் றுவான் பயமோவில்லை, வழிச்செல்ல வேணவர மீவானுற்குரு- ப வைவனைத்தியானஞ்செய் வரமேகேளு - அளிச்சென்றேயவசிமகவ ரவோமென்றே-யழகாக வறுகோணமடைவாப்போடு, செழிக்கவே யாறெழுத்துநடுவேகாணும்-தெளிவாகவிரேகையோராறும்போடே.

## பூசை.

போடிரேகையிற் சரவணபவாவென்றே - புகழாகவறுகோணத் துள்ளேவிந்து, விடுவிருத் தம்பிரண்டு வாயினான்கு - மிளிர்வீரவா கினுடைப் பீசங்காணும், ஆடையா நால்வாயிற் பீசஞ்சொல்வே-ன ரீம் ஸ்ரீம் கிரீ மடைவாப்போடு - மூடையாவோங்கார வட்டங்கா ணு, மோகோகோவறுமுகவன் றியானமாச்சே. (௫௧)

தியானமாந் தெரிசனத்தின் பூசைகேளு - திறமானவத்துவை யா யவுநசித்தி, தியானமா மதனப்பான் மதனசோதி - கிருபையுட ன்மவுநமல ரர்ச்சிப்பார்பார், தயாசித்தியாஞ் சுப்ரமண்யன் பூசையா ச்சு-தான்பிரத்தியக்ஷமாய் மவுநஞ்சொல்வான், அவாவவறுத்தே மெ ஞ்ஞான மவுநபூசை - யான்கண்டே னிப்பூசை நலமாவின்றே. ()

இப்பூசையார்செய்வார் புவனிதுன்ப - வின்பமிலா வேதாந்தி யோகிசெய்வார், இப்பூசைசித்தர்ஞா னியர்கள்செய்வா - ரொழிற்று லாராசிபடுத் தவர்கள்செய்வார், அப்பூசை தனையான்கண் டுனக்குச் சொன்னே - னம்புவியி லெவர்செய்வார் மவுநஞானம், னைப்பூசை சொன்னேன் மூன்றுங்காண்டத்துத் - தாரணியிலாரறிவா ரிந்நூல் பாரே (௫௨)

பாரான சித்தரடை யாளஞ்சொல்வேன் - பரனருளான் மனித ர்களி லொருவராவார், தாரான நூலாராசி பூர்வஞானந் - தான்றொ டர்ந் தவனியிசைத் தோன்றிமேலும், வீறான விட்டகுறை தொட்

டநேர்மை - விளங்கவே லபித்தக்காற் சித்தியாகும், ஆரானபிராண மயவிந்துவாலே-யாச்சுதையா மாயையிலேமனிதர்வாழ்வே. (ருச)

மனித்தராப் பிறந்ததினு லாவதென்ன மகத்தான துலாராசிய றியவேண்டும், செனித்தக்காற் சடமழியா திருக்கவேண்டுஞ்-செட த்திலுள்ள பொருளெல்லாங் காணவேண்டும், கனிட்டனுக்காயமது பெலக்கவேண்டுங் - கருவிகர ணுதிகளைக் காணவேண்டும், சினத் தொழிந்து துலாராசி யடுத்தகற்பஞ் - சிவயோக மவுநத்தி லிருந்து தேறே. (ருரு)

தேறவே சொல்லுகிறேன் மைந்தாகேளு - தெளிவாகவாதார மாறுங்கண்டு, மாறவே வாசியிலே யொடுக்கங்கண்டு - மவுநசிவயோக த்திற் சமாதிகண்டு, வீறவே மெஞ்ஞான தீட்சைகண்டு- மேதக்ககு ருவத்தின் பூசைகண்டு, ஆறவே யண்டரண்ட பிண்டங்கண்டே-யா கரா செகற்குருவை யறிந்துகாணே. (ருசு)

செகற்குருவைக் காணவழி சொல்லக்கேளு - தீமைமிகுபொய் களவு சாமித்துரோகம், வகுத்தகொலை காமம்வஞ் சனைகள்பாவம்- வழுத்தரியவாணவங்களற்றுப்போனல், அகப்பேய்போய்நினைத்த படியேயாகு - மன்றன்றே சமாதிகனிற் கற்பங்கொண்டால், விகிர் தகுரு மெஞ்ஞான மவுநமாகு - மேலான கற்பமுண்ணக் கருவைக் கேளே, (ருஎ)

கேளையாகாயமது வச்சிரமாகுங் - கிருபையுடன்வல்லாரைக்கற் பங்கொண்டால், ஆளைப்பாமண்டலத்தைச் சாவுபோச்சு - தறைவரி யசட்டைதள்ளிப் பூர்வமாச்சு, ஏலையாசிவசுத்தி தேகமாச்சு - தெ ப்போதும்வச்சிரமா யிருக்கும்பாரு, கோளேதும்வாராது நான்சொ ல்வாக்யங் - கொண்டவனே மெஞ்ஞான குணமுள்ளோனே. (ருஅ)

## வல்லாரைக்கற்பம்.

குணமுள்ள வல்லாரைக் கற்பஞ்சொல்வேன் - குருவானசத்தி யுப்புச் சிவத்தினுப்பு, மணமுள்ள பீங்கானிற் போட்டுமைந்தா-மக த்தான சுன்னத்திற் பலந்தான்போடு, அணியுள்ள வைம்முலமைங் காயந்தா - மப்பவொர்பஞ்சிகரண திட்சையுப்பு, நணியுள்ளநான்கை யுமே கூட்டிமத்தி - நன்றாகவிரவினிற்றன் பனியில்வையே (ருசு)

வையையா விரவினிற்றன் பனியில்வைக்க-மகத்தானசெயநீரு
மாகுமாகும், நையைபாவநிற்பட்டா லற்றும்போகும் - கத்தூரி வ
ன்னம்போ லிருக்கும்பாரு, செய்யையாசீசாவிற் பதனம்பண்ணிச்-
செயமான செயநீரு முறைதப்பாது, ஐயையாகுருச்சுன்னம் லிராக
ங்கொண்டே - யச்செயநீர்சரிபெலடையாக் கூட்டிக்கொள்ளே. (௬௰)

## வாலைபூசை.

கொள்ளையாவிரண்டலையும் பிங்கான்றன்னிற்- குணமாகச்சொ
ன்னபடி கொஞ்சம்போடு, நல்லையாரவிதனிலே நிமிடம்வைத்தா-
லுதாந்தவிலேகியம்போ லிருகும்பாரு, பள்ளையாமகிமைநிறை குரு
வின்பாகம் - பதமாகவெடுத்துநீ தேவிபூசை, வள்ளையாவாலையெனு
ம் வாமப்பெண்ணை - மனதார வினைத்துநீ தியானிப்பாயே. (௬௧)

தியானிக்காயாகின்மெஞ் ஞானந்தோன்றுந்-திருவுடையவாலை
ப்பெண் ணைநிரோதிப்பாள், தயாபரியா மனோகௌரி சூலிசிலி- சாம்
பவியந் தரிபஞ்சாட்சரிகௌமாரி, உயர்வுறவே வல்லாரைக்கற்பமெ
ற்கின்-றுன்றுபொருடருமாறு வரமீவாய்கான், கியானத்தோடிருந்
தலகிற் சிவித்தம்ம - கேடில்சிவானந்தமுறக் கடாட்சிப்பாயே. ( )

ஆவென்றசத்தமது கேட்டகாலை - யெப்பொழுதேயென்று
வருவாள்பாரு, அவென்றசத்தத்தா லியாமென்பா - எப்பனே யக
த்தியன்றன் சீடனென்பாய், ஓவென்றேசத்தமிட்டு முத்தமிட்டே-
யொண்மைமுக மலர்ந்துபதேசஞ் செய்தாள்வாள், நாவென்றசற்கு
ருவை நாவாரத்தா - லுதாந்த சிரோமணியைப் பூசிப்பாயே (௬௩)

பூசிப்பாய்சமாதிதனில் யோகத்துற்றுப் - புகலிலேகியமோர்ப
ணவெடைதான் கொண்டால், மூசிப்பாய்லகிரியையா னென்னசொ
ல்வேன் - மொழியவரிதைத்துநா ளளவும்போதை, யாசிப்பாயண்ட
ரண்ட வாசிநொண்டே - யங்கென்றுகும்பித்தா லுயரத்தூக்கும்,மா
சறவேமலசலந்தாந் திரண்டுபோகு - மைந்தனே விந்துவையுங் கட்
டும்பாரே. (௬௪)

பாரையாமண்டலந்தான் கொண்டாயானாற்-பாலகனேபசிபோ
கு மதனமாகும், பாரையா வாசியோ டொடுங்கிப்போகும் - பகாரிய
பனைவாயி லடைக்குமங்கே, ஆரையா வறுசுவையுண்டியில்வெறுப்
பா - மாதாரமாறுமன்றே சித்தியாகும், தேரையாவல்லாரை வருட
ங்கொண்டால்-சீராகவுடன்பெருமை செப்பக்கேளே. (௬௫)

கேளாய்நீ யென்னசொல்வேன் பூர்வஞான - சேகரத்தின் மே லறைதான் திறக்கும்பாரு, மாளாய்மேண்டலத்துக் கோவ்வோர்சட் டை-மைந்தனே யுரியுமந்தக் கற்பத்தாலே, வாளாநீ மதனப்பா றின ங்கொண்டேபார் - வண்பசுவின் பாலேதான் மயங்கவேண்டாம் கோளிறென்னூற் றுறசட்டை தள்ளுமெய்யாக் - கூறுதொகை யாயிரமா முருவங்காணே. (சுசு)

காணப்பா தேகத்திற் குடுகொண்டாற் - கண்மணியேகண்டவு ட னயச்செந்தூரம், மாணச்செந் தூரமெடை பணமாக்கொண்டு-மைந்தனே செந்தேனி லடைவாயுட்கொள், நாணிப்போஞ் சடத்தி லுள்ள நோய்களெல்லா - நவிலரிய செயகற்பமகிமையாலே, வீணப் பா வலையாதே யாருஞ்சொல்லார் - வெளியாகச்சொல்லிவிட்டே னுண்மைதேறே. (சுஎ)

தேறியந்த வல்லாரைக் குருகற்பத்ரைச் - சிராகமுறையறிந்து செய்வாயானல், விறியைந்த பயன்பயக்கும் பரத்தினை - மெய்ம் மையாச் சொன்னெனையா குருவினுணே, மாறிவிக்த முறையதனைச் செய்துபார்த்தேன் - மாசற்ற குருவழியிற் பலிக்குங்காண்பாய், ஆ றறிவாற் கைபாகஞ் செய்பாகந்தா - னறிந்துசெயவின்னுமொரு நூல்பாரதே. (சுஅ)

இன்னுமொரு செய்திதனைச் சொல்லக்கேளு - வெழிலான க ற்பத்தை யுண்ணும்போது, பன்னுகின்ற காற்றுவெயி லாகாவோட் டம் - படர்நடைசத்தித்கலிவை யாகாபொய்ம்மை, துன்னுமொழி கொலைகளவு மாகாவெண்ணெய் - சுண்ணும்பு கடுகுபுளியுள்ளியாகா, தன்னைநிகர் கொம்மைமுலை மடவார்தங்கட்-சையோகமதனையுநீ தள்ளுவாயே. (சுசு)

தள்ளையாகள்ளுகஞ்சா விறைச்சிமச்சந்- தன்னேடுபுகையிலை யுமுப்புந்தள்ளு, மெள்ளவே கடுங்கோப மதனைத்தள்ளு - விரிகடல் சூழ் புவிவாழ்வை யொருங்கேதள்ளு, கொள்ளையா விடயவாசனையி ற்செல்லுங் - குணமிலா மனப்பேயை யதிற்செல்லாதோர், விள்ள ரிய வேகாந்தத் திருக்கின்மாயை - வெருண்டோடும் பூரணத்தி ன முதமுண்ணே. (எ0)

## யோகநித்திரை.

அமுதமிழி யோகமத செய்யவென்னி - லப்பனே காணிட்டிப் படுத்துக்கொண்டு, மமதையிலா திடக்கையை முடிமேல்வைத்து-வ

மூந்துபுரணத்தொர்கழி முனையமேவி, சமரசமாவாசியையே யிழு த்துக்கொண்டு - சமர்த்தாகக்கேசரத்தின் மனைதவைத்தே, அமை தியொடு பராபரத்தைத்தரிசித்தேதா - னையனேலலாட்டத்திற் றாங் குவாயே. (எக)

தூங்குவா யிம்முறையே தூங்குவாயேற் - றுவாதசாந்தத்தன் றோ திறந்தேயாடும், வாங்கவென்றுன் மாநிலத்தின் மனிதனாயா-வ ரைய மீனத் தெரியாமன் மாண்டோர்கோடி, வாங்குதிரைக்கடற்புவி யின் மனிதரென்று-மாளாம லிருக்கவன்றோ சொன்னேனப்பாரு, வங் கின்றலையாம லிருந்துமைந்தா - வென்றனைப்போற்கோடியுக மிருந் துதேறே. (எஉ)

## பத்தியம்.

தேறவென்றுற் கற்பத்தைச் சேரக்கொள்ளு - தியங்காதே யி ன்னுமொரு செய்திகேளு, பாறவென்றுற் பத்தியம்பத் திரமாப்ப ண்ணு-பழியில்திரி கடுகுதிரிபலாதியோமம், வீறுபெறுசீரகமொண் ணாம்புபத்திரி - சிர்ச்சாதிக்காய்நல்புளியாரையோடு, நாறுசிறுகீரை சிறு பயறுடையா - நலமாகக் கட்டியதோ ருப்புமாமே. (எங)

## வெண்சாரைக்கற்பம்.

ஆருமே நற்கொறுக்கைப் புளிமற்றைய - வறைவரிய கற்பூர சிலையின்சுன்னம், வாகானவண்டக்கல்லின்றன்சுன்ன-மகத்தானகன் னைதங்கச்சுன்னம், சேகாகுமொருபொழுதே யன்னங்கொண்டா ற் - றேகமது சட்டைதள்ளித் திகழும்பாரு, பாகமாவெண்சாரைக் கற்பஞ்சொன்னேன் - பகராரிபசித்தர்கட்குக் குருவிதாச்சே. (எச)

ஆச்சப்பா வின்னுமொரு கற்பஞ்சொல்வே-னண்டபகிரண்டம தை யிடித்துக்கொண்டு, கூச்சமிலா திடித்ததிலே தண்ணீவிட்டுக்- குறைவறவேயிழிசாறுநாழிகொண்டு, ஆச்சியமோர் படிகூடவிட்டுப் பின்ன - ரடுப்பேற்றி யதனையோர் சாமமட்டும், காச்சப்பா மெழுகு பத மாகும்போது - கனிவாகக்குருசெயநீர்ப் பாகங்கேளே. (எரு)

## காயாதிகற்பம்.

கேளையா வதைபாற்றி யெடுத்துப்பாரு - கேசரத்தின் காயாதி கற்பமாகும், கோளொன்றும் வாராது குருவைப்போற்றிக் - குரு செயநீ ரொருபலந்தா னதனில்விட்டு, வாளிரவிதனிற்சாமம் காய

வைக்கின்-வன்மைசேர் மெழுகுபத மாகுங்கண்டாய், தாளுறவிம் முறைமதனை முடித்தேயேகாட் - சரமதனுற் றியானித்துப் பூசை செய்யே. (எகூ)

## மேன்மூலசுத்தி.

செய்யப்பா பராபரத்தைத் தியானபூசை - செய்துநீ முடித்த பின்பு செப்பக்கேளு, ஐயனேசூரியோதயத்திலேதா - னடைவாகப் பெருவிரலிற் றடவிக்கொண்டு, உய்யையா வுண்ணாக்கிற்புரளவேற் றி-யும்மென் றுவாசியைநீ கும்பித்தக்கால், கைப்பாகவியன் றகபமொ ருங்கேயெல்லாங் - கழன்றுவிடுமின் னுமொரு சுத்திகேளே. (எஎ)

## கீழ்மூலசுத்தி.

சுத்திசெய்த மூலத்தின் கற்பஞ்சொல்வேன் - றுகளிலாக்கற்ப மது சூட்சாசூட்சம், பத்திமையாச் செய்யவொருசெங்கற்றூழைப்-பகாரிய சோற்றோடே குருவைச்சேர்த்தே, அத்தையொரு சீலையி லேமுடிந்துகொண்டே-யடைவாகப்பிழிந்தக்காலிழியுஞ்சாறு, சித்தி தருங்குருசெயநீர்கூடவிட்டுத்- தீயேற்றி யோர்சாமமெரிததிடாயே.

எரித்திடுவாய் மெழுகுபத மாகுமப்போ - திறக்கிவைத்தென் மகனே யின் னுங்கேளு, புரையற்றசுத்தசலமதனில்வார்த்துப்- புல த்தியனே யிரவிதனிற் காயவைக்கின், அரக்கதுபோற் செம்மைநிற மாகுமையா - வையமதைச் சுத்திசெயு மிதைப்போலுண்டோ, பரு த்ததன முடையமலை மகளைப்பூசை - பண்ணுசெய நீர்மகிமையறை யக்கேளே. (எகூ)

அறையக்கே ளென்னிடத்தன் புள்ளசிட - வசாமிவிர லதினு லே தோய்த்துக்கொண்டு, பறியுமப்பா வுண்ணாக்கிற் புரளத்தேய்க் கிற் - பாழான கபமெல்லாங் கழன்றுபோகும், முறைப்படிசெய்மூ லத்தின் கற்பத்தாலே - முடிந்ததேற் காயசுத்தியாகுங்காணே, மற ப்பிலாதடிமூலஞ் சுத்தியாக - மைந்தனே யந்திசந்தி நாட்டம்பாரே

நாட்டமையா கண்ணோட்டம் பார்த்தாயானு - னலமானசுழுமு னையில் வாயில்காணும், ஆட்டமையா வவ்வாயி திறக்கும்பாரு-வமு தகெங்கை யக்கிருந் தடைவாய்ப்பாயும், வாட்டமையா வமுதமதை க்கொண்டாயானல் - வாழலாங் கோடான கோடிகாலம், பாட்ட

மையா பாவிட்டுச் சொல்லவில்லை - பாலகனே யுன்றனுக்குப் பாரித்தேனே. (அ௧)

பாவித்தே யின்னமொரு கருவைக்கேளு - பற்பினியினண்டமையா வைஞ்சாம்வைப்பு, ஆவித்து மறிவீர்களண்டக்கூறு - டையிரண்டு பத்துடனே யைஞ்சுங்கூட்டி, வாவித்துப்பதினைஞ்சு மெடுத்துக்கொண்டு - வளமாகக் கல்லுரலி லுலக்கைநாட்டி, வவித்தேயிருப்புலக்கை யதனாலையா, விடித்திடுவா யிருசாம மின்னுங்கேளே,

கேளையா வென்மகனே யறியச்சொல்வேன் - கெவுனமென்றரசகெவுனக் குளிகையையா, ஆளையா வத்தனையு மாவதாக்கி - யையனேகுத்தசலங் தன்னிலேவிட்டு, காளையா வலக்கையாற் ஓலக்கிமைந்தா கண்மணியே தெளியவைப்பாய்சாமமட்டும், பாளையாபலிதமாங் கெவுனவித்தை - பாலகனே பரிட்சைதனை யின்னுங்கேளே. (அ௩)

## இரசக்குளிகை.

இன்னங்கேளினமறிந்து சொல்வேனையா - வெடுத்தமுறைதப்பாது குருவின்வாக்கே, அன்னங்கேளடிமூலப்பழக்கத்தாலே - யையனே கல்வத்திற்புளியைப்போட்டே, இன்னங்கேள் சொன்னகுருசெயநீர்விட்டே - வெழிலாக விருசாம மெழுகாவாட்டி, அன்னங்கேளண்டமதி விதானமாக - வப்பனே கெவுனத்திற் குளிகைபாரே.()

பாரப்பா குகையெடுத்து ரவியில்வைப்பாய் - பாலகனே பன்னிரண்டு சாமங்காய்ந்தால், வேரப்பாகுகையெத்துக்கையாற்றட்டவெண்கலத்தின் சத்தமையா வென்னசொல்வேன், ஆரப்பாவறிவார்களண்டவித்தை - யாடலா மிந்தவித்தை யநேகங்கோடி, சீரப்பா முன்சொன்ன தெளிவைக்கொண்டு - திறமாகத்திபெரிப்பாய் சாமந்தானே. (அரு)

## காயாதிசுன்னம்.

சாமமட்டு மிக்குருவைக் காயவைத்துச் சமர்த்தான கேசரத்திற் றீயைப்போட்டு, காமேவு கறப்புவன்னம் போலேகாணுங்-கருக்குருவாஞ் சுன்னமதிற் பலந்தான்போட்டே, ஆமென்றபற்பமினிமுதல்வைபிண்ட - மையனேயிக்கருவி லண்டம்போகிட், டோமென்றே யோர்கொதிதான் கொதித்ததானு - லோகோகோவிறக்கிவைத்தெடுத்திடாயே. (அசு)

எடுத்துப்பா ரண்டமது சிவந்துகாணு - மென்மகனேகுருசெயரோதனிற்போகிட், டுடுத்துப்பாரோர்சாமமாறவிட்டே - பூமையென்றகுகைதனிலே யண்டம்வைத்தே, அடுத்துப்பார்மெழுகினாற்சந்துமூடி - யையனேசெபுடத்திலடைவாப்போடு, மடுத்துப்பார் மகத்தான புடத்தினீறு - மைந்தனே காயாதி சுன்னந்தானே. (அஎ)

தானானகாயமஃ தாதியாதி - தருவான சுன்னங்கே சரத்தின்சுன்னம், கானான கடையில்விற்குஞ் சாக்கெல்லாந்தாய் - கட்டுமையாவிச்சுன்னக் குருவினாலே, மீனான சுன்னமதைப் பதனம் பண்ணு - வேதாந்தசுந்தரமே யின்னுங்கேளு, ஆனானவம்பிகையாம் வாலைப்பெண்ணை - யர்ச்சித்துப்பூசித்துத் தெரிசிப்பாயே. (அஅ)

தெரிசிப்பாய்தேனமுதஞ் சொரியுமாதைத் - தேவர்முனிவரர் துதிசெய் தேத்துமாதை, அருச்சிப்பா யண்டசராசரத்தின் சுன்னமாச்சுதையாலின்னுமொரு கருவைக்கேளு, பரிசிப்பாய் பராபரத்தின் முப்பூச்சுன்னம - பரிவானகுன்னங்காயாதிசுன்னம், முரிசிப்பாய் முச்சுன்னம் பலந்தான்கொண்டு - முன்சொன்ன மூதண்ட தயிலங்கேளே. (அசு)

## கருத்தயிலம்.

கேளேநீயைஞ்சுவைப்புத் திங்களொன்று - கேசரத்தின் பச்சோந்தி பச்சைப்பாம்பு, ஆளேநீ ஞெண்டோடு பச்சைநாபி-யன்பாகவாந்தைக்கண் கோட்டான்பிச்சு, தேளேநீ தேவாங்குக் கண்ணும்பிச்சுந் - தேசிபுடையிரத்தமப்பா பிச்சுமாகும், மாளேநீமட்டவளைப்பிச்சுங்கண்ணு - மகத்தானதேரையையா பச்சையாமே. (கூ0)

ஆமையா செய்யாணு மெய்யாம்வித்தை - யருநட்டுவக்காலிகுழி வேழத்தோ, டேமையாவிப்புலிங் கருநாய்மண்டை - யியம்புஞ்செவ் வாலரணை யுடும்பின்பிச்சு, காமையாகரும்பூனைக்கண்ணினோடு - கருவான ஞெண்டோடு கபாலவோடு, வேமையாவழிமறித்தான்பிச்சுங்கண்ணும் - வேதாந்தவிச்சுளியின்பிச்சுமாமே. (கூக)

ஆமென்ற செந்தேளுங் கருந்தேளாமை - யையசெங்குளவிகருங் குளவியோடு, தேமேவு கருங்குளவிநன்ஞெண்டோடு - தெளிவான சுழல்வண்டு கருவண்டோடு, மாமேவு புனுகோடுபிள்ளைப்பூச்சி-மகத்தான நாகத்தின் விடம்பிச்சோடே, ஏமென்ற விந்திரகோபத்தோடைய - வேறுதொகை முப்பத்திரண்டாமன்றே. (கூ௨)

ஆமேதான் அந்தரமே யின்னுங்கேளு - வையனே யழிஞ்சிவி
ணை காழியப்பா, மாமேவு மதனைப்பூ மந்தம்வித்து - மகத்தான மரு
ப்பியானை னைஞ்சிவேரும், காமேவுகாஞ்சொரியின்வேருங்கூட்டிக்-
கண்மணியோஞ்சாவின் வித்துங்கூட்டி, வேமேதான் வெண்குன்றி
க் கருங்குன்றிக்கு - விளங்கவேவோர்பருப்பாகு மின்னுங்கேளே. ()

சேனோயா சாதிக்காய் சாதிபத்திரி - கேடிலி லவங்கப்பூ லவங்க
ப்பட்டை, கோளறுபிக்கத்தூரி மஞ்சள்பாரும் - கூறரியமுறையைப்
பா பதினெஞ்சரகும், ஏலவே யிலைவடனைத்தும் ரவியிற்காயி - னென்
மகனே மெத்தகன் றினிமேற்கேளு, கோனேயா வலியகல்லுரலிற்
போட்டுக் - குற்றவா யிருப்புலக்கை யதனுற்றுனே. (௬௪)

தானென்ற விருப்புலக்கை கொண்டுகுற்றச் - சாற்றரியகுரு
செயநீ ரதனில்விட்டுக், காணுன வைம்மூலங் கூடச்சேர்த்துக்-கனி
வாக விஞ்சனியைப் பண்பாய்ச்சேரு, தேனான சஞ்சரியாய்க் கருவா
ய்க்குற்று - தேற்றமிகவேண்டுமென்று தாயைப்போற்றிக், கோனு
னே பிசின்போலே வரும்பாரன்பாய் - பேய்மகனே யலையாதே யின்
னுங்கேளே. (௬௫)

இன்னுமையா சொல்லுகிறேன் கனிவாக்கேளு - வியம்பரியசா
ஸமென்னுற் றுறுகோவை. அன்னமையா விவைக்கெல்லாஞ் சித்
துவித்தை - யாடலா மிந்தயிலந் தநேகம்வித்தை, கன்னமையாகலி
யுகத்துச் சித்துவித்தை - கண்மூடிவிழிக்குமுன்னே யநேகம்வித்
தை, இன்னும்வெகு வித்தையையாவினோதவித்தை - யென்னசொ
ல்வே னட்டகன்ம வித்தையாமே. (௬௬)

ஆமேதா னறுபத்துநான்குசித்து - மாடலா மித்தயிலத்தாலே
பாரு, சாமேமுன்சொன்னவைந் சாதிகங்கள் - சாற்றரியதயிலத்தி
ற் சிதறிப்போட்டு, வாமேவு கமபதினுற் கழற்றவாய்நீ-மகத்தான
பிசினெல்லாந் தயிலமாகும், கோமேவு குழிவெட்டிக் கலசம்வைத்
துக்-குழித்தயில மிறக்கிடுவாய் குணமாத்தானே. (௬௭)

தானென்றவொருமுழமாக் குழிதான்வெட்டித் - தகைமையெ
ற புதக்கலசம் புதைத்திடாய்நீ, பானென்ற கருக்தயிலப் பாண்டந்
தன்னைப் - பாலகனே கலசத்தின் மேலேவைப்பாய், ஆனென்ற பா
ண்டத்துக் கவாயமிட்டே - யாரணிபி லிட்டவெருமுட்டைகொண்
டே, ஏனென்று நீயெரிப்பாய் முட்டையாலே - யிறங்குமையா கல
சத்திற் றயிலந்தானே. (௬௮)

இறங்குகின்ற தயிலத்தை யெடுத்துப்பாரு - வென்னசொல்
வே னதினுடைய வன்னமையா, கறங்குகின்ற வன்னந்தான்கறுப்ப
தாகுங்- கண்மணியேயிசாவிற் பதனம்பண்ணு, நிறம்புகின்றசவ்வா
துபுனுகுவாச-நிகழ்த்தரியகத்தூரிமூன்றின்வாசம், பிறங்குகின்றவா
சமதைப்புகட்டியேயும்-பேசியவாலையைநீ பூசைபண்ணே. (௯௯)

பண்ணையா வெண்ணூறு சாலவித்தை - பலிதமையாவித்தனை
யுந் தொட்டேயாடாய், அண்ணையாவாறிரண்டு நூறுசால - மைய
னே யித்தயிலங்கொண்டேனன்று, மண்ணையா யிரவிலக்கப்பெருநா
ல்பிட - மகத்தான வித்தயிலந் தொட்டேயாடு, விண்ணையா விநோத
வகையிருநூறுமால் - விவேகமுள்ளபாலகனே யாடுவாயே. (௱)

ஆடுவா ரகத்தியன்றான் சொன்னவாக்ய - மையனே யித்தயில
ப்பெருமைதன்னைப், பாடுவார் பதினெண்பேர் நூல்கடோறும்- பா
லகனே யித்தயிலங் கொண்டுசாடு, சாடுவாய் சகலசித்தர் நூல்கட்கெ
ல்லாஞ் - சற்குருவா மிந்நூலை நூறுமாமற், றிடுபடவெந்நூலுமிந்
நூலொவ்வா - விந்நான்மூன் றான்காண்டம் பூரணமன்றே. (௱௧)

## மூன்றாங்காண்டம்

முற்றிற்று.

---



உ

கணபதிதுணை.

---

அகத்தியமுனிவர்

அருளிச்செய்த

# பரிபாஷைத்திரட்டு.

## நாலாங்காண்டம்.

### காப்பு.

பூரணமாம்பரிபாடை நாலாங்காண்டம் - புகழ்பெரிய பனிமலை நற்றவஞ்செய்தீன்ற, வாரணவுகொம்மைமுலை மங்கைபெற்கு- வமுத்தினுளன்புடனே யானுமாதி, காரணமாங்கருக்களெல்லாங் கண்டு தேறிக்- கருக்குருவிங் நூற்கவிபைக் நூறமைய, சிரணமாப்போகா மற் சித்தர்கட்குச் - செப்பினே னிதற்குச்செவ்வேள்காப்பாமே.()

செயமாகச்சொல்லிவைத்தே னிரண்டாங்காண்டஞ் - சிராகமுப்பூவின் கருவுங்காணும், வயமாகமறைத்தகருக் குருவுந்தோன்றும்- வசனித்தேனிஞ்சாங்காண்டம்மறைப்பாச், சயமாகவுதகமஃதப்பேயாகும் - துகளறுசிர்த்திட்சைவிதி யைஞ்சாங்காண்டம், நயமானசரக்கினது குணக்கூறெல்லா-நானறிந்தபடிசொன்னே னலமாத்தானே.

தானென்றகைபாகஞ் செய்பாகந்தான் - றப்பிதங்களில்லாமலைஞ்சாங்காண்டம், வானென்றபூவெடுக்குந் திட்சைமார்க்கம்-வகைதெரியாமூடருக்குத் தெரியச்சொன்னேன், தேனதனைப் பொழிந்தாப்போற் கருக்களெல்லாந் - திறமானமுக்கருவா மண்டக்கூறே, யானென்றுகைகாட்டு மைஞ்சாங்காண்ட - மாதலினாற்சோதியிலேயடங்குவாயே. (௩)

## நாதவிந்து அண்டபிண்டம்.

வாரானவ்வகாரமது விந்துவாச்சு - வகையானவுகாரமது நாத மாச்சு, பேரானவோகாரமது பிண்டமாச்சு - பேரொளியாம்பராபர த்தி லெடுத்தகூறு, உளரானசிவசெந்து பரத்தின்கூறு, வுதித்தநின் றநாதவிந்து சத்திகூறு - ஆரானபிண்டவிர் தண்டக்கூறு, வாச்சுது பார்மூன்றுலே யைந்தூறுச்சே. (௪)

ஆச்சுதுபாரகாரமுகா ரம்மிரண்டு - மறைவரிய வொகாரமொ டுமூன்றேமூலம், பேச்சிதுபார் பேசாத் மூலமாச்சு - பேரான வூ மையென்ற வுயிருமாச்சு, காச்சுதுபார் கருக்குருவாம்பிண்டமாச்சு- கருவுக்கு ளமுதமென்ற சலந்தானுச்சு, வாய்ச்சுதுபா ரமுதமென்ற பனிநீராச்சு - மகத்தானசுத்தசல மதற்குப்பேரே. (௫)

அதிகலரசமதுதான் விந்துவாச்சு - ஏறைவரிய நாதங்காறலே யுமாச்சு, பதியான வதுவதுவாம் விந்துமாச்சு - பரம்பொருளேயிஃ தையா வமுதகெங்கை, அதுவானவிதுவதுவாந் தேசிநீரு-மதினுதி த்தவமுரியது சுத்ததீர்த்தம், அதுவான பதியதுதான் சோதியாதி- யதையறிய வேண்டிலைந்தாங் காண்டம்பாரே. (௬)

பாரேதசிரோது பதிதானேது - பருதியென்ற ரவிமதியுங்கூடு நாளிற், சிரேதநீர்தானே தருவமேது - செய்ததவப் பயனதினுற் சென்மக்கூறும், ஆரேதுவரமேது சுகிர்தமேதா - லறிவரியசருவியி னுல் வளப்பக்கூறு, காரேதோவேரேது புளிதானையா கடைந்தெடு த்த திருவாணியாணியாமே. (௭)

## ஐம்மூலம்-ஐங்காயம்.

ஆணியென்றாலாணிபது வாலைக்கொண்டே - யறுக்கலாமதின் கசிவை மனதினுலெ, வணியென்றாலெணியஃ தேறேறப்ப-வெழிற் குருவங் கிருந்தாரே தருவங்கண்டு, பாணியென்றாற்பாணியினூன் றிக்கொண்டு - பராபரமா னைம்மூல மைஞ்சுகாயம், வேணியென்று ல்வெணியன்றே றுங்கவெணி - வேதாந்தமதனில்விளையாடுவாரே.()

ஆடுவார்யமுனையென்ற வமுததீர்த்த - மண்டலத்திலசண்டம து சுத்ததீர்த்தம், பாடுவார்சலமதனிற் கங்கையாடிப் - பரபூசைகுரு பூசைசெய்தேநிற்பார், நாடுவார்நாதாந்த சத்திகொண்டு - நல்லபனி நீரையன்றே தெளிபவைப்பார், தேடுவாரில்லையதை யறிவினுலே- தெளிவானவுப்பெடுத்து முப்பூவாக்கே. (௯)

## கல்லுப்பு.

முப்பூவாமுப்பதனிற் றப்போவில்லை - மூன்கருவிரமக்கருவைக் கண்டுதேறு, சப்பானசப்பதுவுங் கசிவுபோக்கிச் - சாரணைக்குட் கெவுனமதாக் குப்பிக்கேற்றி, அப்பான கொப்பதுபொன் மணிக ளாக்கி - யம்புசாகத்தொடுத்தாற்போ ருணியேற்றி, ஒப்பானகப்ப ணாகொன் டடுப்பிலேற்றி - யோர்பத்துச்சாரவத்தி யுப்பதாச்சே.

அச்சதேயாகாச வுப்பதாச்சு - தறிவாலேயவனைவெல்ல யாரா லாகும், தோச்சுதேதொடுத்ததவம் படித்துப்போச்சு - துரியமென்ற வருவமது துரும்பதாச்சு, தூச்சுதேதுரும்பதுவுந்தூணதாச்சு-தொ டுத்தசா மண்டலந்தா னேறலாச்சு, சாச்சுதேகருவாகி யுருவுமாகிக்- காய்கனிபாயுற்பவித்த கல்லுப்பாச்சே. (௰க)

கல்லானகல்லதுவும் வெல்லமாட்டார் - கருவான வுருவதுவுஞ் சொல்லமாட்டார், வில்லானவில்லதுவே தொடுக்கமாட்டார்-விற்பி டிக்குஞ் சாயலதைக் காட்டமாட்டார், இல்லானவில்லதுவு நல்லவீ டே - யில்லமென்றசொல்லதுவே நிறுத்தமாட்டார், அல்லானபுல்ல துவே யண்டநீரா - மப்பூவிலப்பனிநீரடைவுகேளே. (௰உ)

அடைவான வடைவதுவா மண்டந்தானு - மதிலிருந்து விந்து வைநீ யெடுத்துக்கொண்டு, கடையானசத்துருவா மந்நீரோடு-கருவா னவோட்டினுடைச் சவ்வுபோக்கி, நடையானநாதமதைக் கூடச்சே ர்த்து - நாட்டுவாய்கல்லுரவி லூட்டக்கேளு, அடைவானவச்சிரமா முலக்கைகொண்டே-யண்டத்தின் மேலோட்டை வலுக்கக்குத்தே.

குத்துவா யிருப்புலக்கை யதனைக்கொண்டு - குமுறவே யிடித் ததனைத் தூளதாக்கி, அத்துவாய் மாச்சேரக் குத்துக்குத்தே - யதி னுடைய வீரமெல்லாம் போகக்குத்து, தத்துவாய் தங்கமென்ற மா வெடுத்துத் - தாயானமயேஸ்வரியைப் பூசைபண்ணு, வத்துவாமா தாவே நாதரூபி - மாதேவியென்றெண்ணி வாழ்த்துவாயே. (௰ச)

எண்ணவேபூருவத்தி லமுதவாழ்வே - யெங்கள்குலம் விளங்க வந்த மங்கைப்பெண்ணே, கண்ணவேசொருபவண்ட வருபப்பெ ண்ணே- கருவதனிலுருவுதித்த கன்னிப்பெண்ணே, அண்ணவே ய முதத்தில் வாழும்பெண்ணே - யண்டத்திற்குடியிருக்கு மாதிப்பெ ண்ணே, சொன்னமொழிதவறாத சொந்தப்பெண்ணே - சொற்பெ ரிய வகத்தியன்றன் வாழ்வேயம்மே. (௰௫)

வாழவேவேண்டுமென்று லயவித்த - மாவாகிற்பணவெடை
தானெடுத்துக்கொண்டே, அழவேயாதிலிந் தமுத்தன்னி - லய
னேயிக்கருணவி யடைவாய்ப்போடு, காழவேசலம்போலே யிருந்தவி
ந்து - கல்லியாநாதவிந்து கலந்ததானால், சாழவேசலநிதியாஞ் சமு
த்ரதீர்த்தஞ் - சங்கையிலாப் பாலமுதத் தெளிவதாச்சே. (௬௬)

## சுத்தசலம்.

தெளிவானபாலமுதம் பனிநீராச்சு - செவிட்டாதசுத்தசல மி
துவேயாச்சு, அளியானவாறுச்சு பாலாறுச்சு - தாமிரத்தெட்டண்ட
மட்டும் பாயலாச்சு, குளியானதெளிவாச்சு தறிவுமாச்சு - கோடா
னகோடிசித்தா நிதமாச்சு, வளியானவளியாச்சு பாறையாச்சு-மகத்
தானதேசிநீ ரென்றும்பேரே. (௬௭)

## தேசிநீர்-ஊசிநீர்.

பேரானதேசிநீர் குருவைக்கொண்டு - பேருசுத்தெளியவைத்த
வூசிநீர்தான், ஊரானவூசிநீர் மூன்றுஞ்சுத்தி - யுடன்சேர்ந்த காசிநீர்
கருவைக்கேளு, காரானகருவதுதான் காசிநீரே - காசியென்ற சலநி
தியாம் யமுனைதீர்த்தம், தூரானதுங்கபத்திரி விருத்தகங்கை-கருவ
மென்றசரஸ்வதியின் தீர்த்தமாமே. (௬௮)

தீர்த்தமாமுயர்துங்கவேணிவாணி - திறமானநர்ம்மதையாந்தூ
யகன்னி, ஆர்த்தமாம்பற்பகதி யென்றும்பேர்மற் - றதைவரியகும
ரியென்றுமிதற்குப்பேர்சீர், * சார்த்தவெண் சங்கநதியென்றும்பே
ராஞ் - சாற்றுசரவணப்பொய்கையென்றும்பேராம், ஆர்த்தமாமறு
மூன்றுங்கூட்டினக்கா - லமுதமெனுஞ்சலநிதிசீர்ச் சத்தியாச்சே. ()

ஆச்சுதுபா ரமுதமென்ற வமுரிதன்னு - லடைவாக முன்சொ
ன்ன பாவைதோன்றும், பாச்சிதுபார்சலநிதியாங் கங்கையாலே-பா
லமுதமென்றவொரு பனிநீராலே, காச்சிதுபார் கனகமென்றகையி
னாலே - கலக்கியேவடித்திடுவாய் கங்கையைத்தான், ஏச்சிதுபாரெ
ச்சலமுந் தெளிந்துபோகு-மினத்தோடேயினமதுசேர்ந்தேகமாமே.

ஏகமென்ற வேகமென்ன தேகந்தேக - மெடுத்ததொருதுறை
க்கெல்லா மிதுவேயன்னம், பாகமென்றபாகமென்ன கைபாகந்தான்-
பாலமுதம்வடித்தநீ பசிதீர்த்தக்கால், சாகமென்றநாகமென்ன விது

* சார்த்தவென்பது - சார்த்தவென விகாரப்பட்டது.

வேயன்னம் - கருவுறித்தமதாச்சுன்னங்காட்டொணுதே, மாகமென் றமாகமென்னமதியிஞலே-வன்மையாவறிகுருவைமாட்டினேனே.

மாட்டினேன் புலத்தியனே யின்னுங்கேளு - மறைக்கவில்லை யொளிக்கவில்லை மறைப்போவில்லை, காட்டினேன்குருபாகமைஞ்சா ங்காண்டம் - வைபாகஞ்செய்பாகங் கருவின்பாகம், பூட்டினேன் பூச் சரக்க ளொடுத்தாற்போலே-புத்தியுட னிந்நூலின்பொருளைக்காண் பாய், பாட்டினேன்பலகலைக ளிந்நூலுக்குட் - பராசத்திதிருவருளா ற் பார்த்திட்டேனே. (௨௨)

## ஐங்காயம்.

பார்த்திட்டேளுகவிந்திரண்டுங்கூடி- பரிவானவண்டவிந்துபழ ச்சாறுகும், அவிர்த்திட்டவிரண்டுவிந்து முடிதானையா - வதிற்பிறந் தமுடிவிந்துபழச்சாறுகும், தகர்த்திட்டவைங்காய மைந்துங்கூடிச்- சமைந்ததேவைம்மூல மைந்துமாச்சு, வகிர்த்திட்ட வொன்றதிலே யைந்துமாச்சு-மகத்தானதெளிவாச்சுதொன்றுப்போச்சே. (௨௩)

ஒன்றுனவொன்றன்றே யிரண்டதாச்சு - தோகோகோ வுரு வாச்சு குருவுமாச்சு, மூன்றுனே மூன்றன்றே முடிதானுச்சு-மொ ழிவரியகாயாச்சு பழமுமாச்சு, நன்றுனநன்றன்றே காலதாச்சு- நல மானதிசைப்பூடு மிதுவேயாச்சு, தன்றுன வாயிரமாமைந்துமாச்சு- தநிற்பிறந்தபெண்பூடு பூவுமாச்சே. (௨௪)

## திசைப்பூடு.

பூவானபூவதுவேசெடிதானன்று - பூதலத்திலெங்குமுண்டுபூத் தானன்று, மூவானமூன்றதுவு மொன்றுச்சேர்ந்தான் - முப்பூகம்பி றக்குமடா வெள்ளைப்பூக்தான், ஆவானவிதற்குப்பே ரிதுதானையா- வா ரறிவார்திசைப்பூண்டை யவனிமீதில் மாவானமாக்களைத் தமுதந் தன்னை-வகைபெறவே நலமாகச்சொல்லக்கேளே. (௨௫)

## இரசக்கட்டு.

கேளப்பாவன்பாகப்புலத்தியாகேள - கெவுனமென்றரசக்குளிகை கெவுனநன்று, அளியாபின்சொன்னவெஞ்சாய்காண்ட - மதின்முடி ந்தமாணிக்கக் கன்மாளமென், மாளியாமாக்களைத்த திராவகந்தான்-

மகத்தானவெடியுப்பை யதனிற்போட்டு, பாஷையாவெவுனமென்ற வெவுனவித்தை - பரிபாடைபகர்தரவீ யின்னுங்கேளே. (உசு)

இன்னங்கேளினமறிந்து சொல்வேனையா - வெடுத்தமுறைதப் பாது குருவின்வாக்யம், அன்னங்கேள் வெடியுப்புப் பாறையுப்பா-மைந்ததினுன் முப்பூவுமுடிந்துபோச்சு, இன்னங்கேண் முன்சொன்னகுருவைவீதா - னிவிதாகச்சொல்லிவிட்டே னிந்திலேகாண், வன்னங்கேள் வெடியுப்பை யதனிற்போட்டே - வளமாகத்தியெரிப்பாய் சாமந்தானே. (உஎ)

சாமந்தா னெரிந்தக்காற் கட்டிப்போகுஞ் - சாற்றரியமாக்கெவுன குளிகைதானும், வாமந்தான் வந்துவைந்துப் பூசிப்பாய்வீ-வங்கம்வோற் கட்டிமிகச்சிவந்துகாணும், நாமந்தான் சொல்லிவிட்டே னொளிக்கவில்லை - நலமானவெடியுப்பே சிவவுப்பாகும், பாகமாச் சொல்லாமன் மறைத்தார்சித்தர் - பரமானகணேசன்றன் மகிமை கேளே. (உஅ)

கேண்மூலா தாரவிநாயகன்றனுண்மைக்- கேசரமாம்பூரணத் தைக் கூறவன்பா, நீண்மறுவினின்மலமா நிறைந்தசோதி-நிகரில்லா வைங்கோணங் கணேசன்வீடு, வாண்மிக்க வோர்வட்டமைங்கோண ந்தான் - வல்லபைமா திருக்குமோங் காரவீடு, கோண்மிகையற்றொ ளிருமொரு திரிகோணத்திற் - குறோ உறோ இறோவென வட்சாத் தைமாறே. (உகூ)

மாறவேயெழுத்ததனைச் சொல்லக்கேளு - மகத்தான வைங் கோண மைஞ்சுங்கேளு, ஏறுவாய்சுந்தரமே ஓங்ரீங்கென்றே - யேறி ஸ்ரீங் கிறீங் அறிங்கென் றான்றுவாய்வீ, ஆறுவா யைங்கோண வடிதன்மூல - மாறியப்போகிறு ரவனியீதே, கிறுவாய்கணபதியின் சக்கரத்தைக் - கோரத்தின்மூலமதை யடைத்திடாயே. (௩௰)

அடைத்திடுவா யட்சரங்கள் பிசகாமற்று - னடைவாகத்தூப திபாதிதந்தே, எடுத்துமெல்ல விலட்சமுரு செபித்தாயாகி லென் னசொல்வேன் கணபதிதான் பிரகாசிப்பான், மடைத்தனமாத் திரி யாதேசொல்லக்கேளு - மகத்தானவல்லபையும் பிரகாசிப்பாள், கொடுத்திடுவாள் வல்லபைவீ கேட்டவெல்லா - வரங்களையுமாதவிறுற் பூசிப்பாயே, (௩க)

பூசிமூலாதார * சுழுனையொட்டிப் புகழாகக்கும்பித்தான்மவுன ஞ்சித்தி, வாசியையங் கொன்றுநீ தம்பித்தக்கால்-வாமூலாங்கோடியுக ம் வாதஞ்சித்தி, பூசைசெயினைங்கோணஞ் சித்தியாகும் - புகலரிய முதற்சேவை தெரிந்துகொண்டே, கூசாமற்கும்பித்துத் தம்பித்தக் கால்-கோடானகோடியுக மிருக்கலாமே. (௬௨)

அருமேயோகமது பார்க்குநாளி - லாதாரசக்கரத்தி னறையை க்கேறி, ஒருமே யோங்கார திரிகோணத்தி - லொருமித்துப் பிசகொ ன்றும் வாராதுன்று, காருமே கற்பூர தீபசோதி - கடாட்சிப்பாள் சக்காரத்தைப் பூசிப்பாய்நீ, வாருமேவாசியைநீ யிழுத்துவாங்கி- மக த்தான மனக்கல்லு லொட்டிப்பாரே. (௬௩)

பாரோநீ கோரத்தின் சோதிகாணும்-பருதியுடன் தெரிசித்தே யப்பார்பாரு, ஓரோநீ கணபதியின் மூலஞ்சொன்னே - னொருமையு டன் புலத்தியனே யறிந்துபாரு, வாரோநீ பரப்பிரம சொரூபமூலம்- வரிசைபெற நாதர்கடம் மகிமையாலே, பாரோநீ பதினென்பேர் சித் தர்மெய்க்கப் - பாடுமிக்காண்டத்தினது மகிமைதானே. (௬௪)

## சுவாதிட்டானம்.

மகிமைபெறு பரிபாடை யைந்தாங்காண்ட - வண்பொருளைப் போறிவா லறிந்துதேறே, மகிமைமிகு குண்டலியின் மூலங்கேளு- மாசில்சுவாதிட்டானக் குறிலயப்பாரு, நகலிலுயர் நாற்கோண மிரு கோணந்தா - நலமானமுக்கோண மொன்றேவட்டம், தகைமைபெ று நகாரத்தின் மேலேபோடு - சாற்றநங் மங்ஸ்ரீங்அங் மறிக்கென் றுங்கே. (௬௫)

ஆரவே நாற்கோண மடைவாப்போகிட் - டக்கோணத்தட்சர ங்க டம்மிலைய, பூரணமா விரிரண்டட் சரத்தைப்போடு-புகழ்பெரி யவிந்துவிலே யங்கென்றான்று, நீரொன்றநிர்க்குணத்தை நிராயவத் லைத - நேயமா யோகத்திற் பூசிப்பாய்நீ, வாரொன்ற வாசியைநீ யிழு த்துவாங்கி - வடகலையிற்பார்த்துமெல்லச்சாதிப்பாயே. (௬௬)

சாதியாம் வாசியைநீ வரவழைத்துச் - சதகோடி யுகமளவும் யோகம்பாரு, எதிலரோ வுனைவெல்லார் சித்தர்வெல்லா - ரொன்மக னே சுந்தரமே யின்னங்கேளு, ஆதியிலே தீபதுபாதிதந்தே-யடை வாக விலட்சமுரு செபித்தாயேலப், போதுநின் கண்ணெதிரே சாற றவொன்றைப் - புகழ்பெரியசோதியது காணுந்தானே. (௬௭)

---

* சுழுனை என்ப திடைக்குறை.

## மணிபூரகம்.

நாலோ ணுற்கோண மன்றேசித்தி - தகைபெறுநா லெழுத் தாகளு மடைவாச்சித்தி, சேனேதான் பரப்பிரம மவுநஞ்சித்தி-செ யமாகச் சரஸ்வதியும் பிரமன்றானும், மானேதான் கேட்டவெல்லா மீவார்பாரு - மகத்தான பூரகத்தின் வண்மைகேளு, வானேதான்பூர கத்தின் மூலமையா - வண்மையதா வரைநடுவே ஙிறக்கேளே. ()

இறுவாய் முக்கோணநடுவேசற்றும் - கேடிலுயர்மகாரமோடுகோ ரங்காணும், பிறுவாய் ஓங்காரம் ஸ்ரீங்காரந்தாம்-பிறிவாகச்சுத்தாமே பிரித்துப்போடு, ஊறிலாதியோகத்தி லிருக்கும்போதே - யொட்டு வாய் சக்கரத்தை யொட்டிப்பாரு, மாறுவா பட்சரங்க டமையறிந் தே - மகத்தான சக்கரத்தி லாடுவாயே (௩௯)

சக்கரத்தி லாடுகின்ற சந்திபீசஞ் - சாதுவாய்த் தவருமற்சார் ந்துகேளு, அங்கரத்தி லாடுமட் சரத்தைநாட்டே - யளவிறந்த வித் தையடா யார்தாஞ்சொல்வார், விக்ரகத்தி லாடுகின்ற மால்பூமாது- வேதாந்த பூரணத்தில் விளக்கங்காணும், சக்கரத்திலாடுகின்ற வாசி பீடஞ் - சற்குருவின் கடாட்சத்தாற் சோதிப்பாயே. (௪0)

சோதித்தாற் றெரியுமடா மவுநபீடஞ் - சொல்லரியபூரணந்தா ன் சொல்லப்போமோ, வாதித்தான் மவுநமா வாசிகொண்டு-மாட்ட லா மிடைகலையின் வாசித்தம்பம், ஆதித்த ஞதியடா வங்கென்றான் றி-யரகரா வாசியைநீ யிழுத்துவாங்கு, சோதித்துக்கும்பித்தோர் நி லையாகில்லு - சொலற்கரிய சூரியன்போற் காணுவாயே. (௪௧)

காணுமையா ரவிகோடி மதியுங்காணுங் - காணரிய வதிசயங் கள் காணும்பாரு, மாணெழின்மா லிலக்குமியோ டமர்பொற்பீடம்- வழுத்தரிய மாப்பெரிய மனக்கண்ணாலே, காணரியவவர்கடரி சனத் தைக்கண்டாற் - கழறுபதிணுறுவய தாவாயீது, வேணுமென்றியோ கமதை யார்தாஞ்செய்வார் - வேணவா வற்றவனே யோகிமரதோ.().

யோகிக்கேயாகுமன்றிமற்றோர்க்காகா - துலகத்தோர்க்காகா துகி சயாச்சொன்னேன், போகிக்குமாகாதுஞானிக்காகும்-புகழ்பெரிய ம வுனிக்கு மகத்தாஞ்சித்தி, யோகிக்கே யாகும்பூ ரணத்தின் மூலம்- யோகத்தைப் பூசித்துத் தரிசிப்பாய்நீ, ஆகுமோமற்றவர்க்கிந்தமார் க்க-மடுக்கினவர்க்கிடுக்கண்வர் தெய்துந்தானே. (௪௩)

காணவே நீபெறு பாதிநக்தே - கண்மணியே யிலட்சமுரு செ
பித்தாயாகில், வீணாய்ப்போகாதே யிராகியோர்க்கு - விண்டுதிருமா
லுப்பிரசன்னமாவர், கோணலிலாத்தொட்ட குறையென்பதென்னே-
கூறுதுலா ராசியிலேனோர்க் கெய்துஞ்சித்தி, ஆணாட்பிறந்தாலுமமை
ப்புவேண்டு - மநாகதத்தின் மூலமதை யறையக்கேளே. (௪௪)

## அநாகதம்.

அறையக்கே ளநாகதத்தின் மூலஞ்சொல்வே - ஞாறிவாரறு
கோண மாறுதாரம், அதைவரிய வறுகோண முன்னேபோகிட்-டப்
பினே முக்கோணம் பரிவாய்போடு, நறுவியவோர் நடுமூலத்தகாரம்
போடு-நவிலுயர் சிகாரமோ டுகாரம்போடு, மறுவற்றவடபக்கம்றி
காரம்போடு - மகத்தானவகாரமொடு லியுங்கூட்டே. (௪௫)

கூட்டுவா யோகசிவ மவுநக்காணும் - கூறரிய நாதவிந்து கெவு
னயோகம், நாட்டுவா யுருத்ரசிவ யோகவாசி - நவிலுருத்ர பீசத்தி
னுணுக்கங்காணும், ஆட்டுவாயஞ்செழுத்துமுன்னேபோகிட்- டாக
ாரவாசியைநீ சிங்கென்றான்று, பூட்டுவாய் கும்பித்துச் செபித்தா
யானுற் - புகழான வாசியது நிலைக்கும்பாரே. (௪௬)

நிலைக்குமது நடுவணையிற்சிகாரபீட - நிற்குணத்தின்வாயிலதுமூ
டும்பாரு, உலக்குமஃ தொன்பதாம் வாயின்மூடு - மோர்வாயின்மூ
டாதே யுரைக்கக்கேளு, அலைக்குமப்பா வநாகதத்தி னபானவாயு-
வடித்திருக்குமோர்வாயி லார்தாங்காண்பார், நிலைக்குமையா ஞானக்
கண்தனைக்கொண்டு நிலைத்துநீபார்த்தக்காற் றெரியும்பாரே. (௪௭)

பாராய்நீ கதர்கட மாயைமாயை- பகருவாரென்றனுயிரத்தை
ப்பாரு, கோரகக்காவியபு ராணஞ்சொன்னே-னிகழ்ந்திடற்கரியவோ
ராஞ்சாங்காண்டம், நேராய்நீ யோர்வாயில் கண்டேசொன்னேன்-
நிகழ்மூன்ப தறகுமேற் பத்தாம்வாயில், ஓராய்நீ கொங்கணருங்
கடைக்காண்டத்தி - லொளிக்காமற் சொல்லிவிட்டா ரறியலாமே.

## விசுத்தி.

அறியலா மநாகதத்தின் மூலமாச்சு - தப்பாலே சொல்லுகிறே
ன் விசுத்திவீடு, அறியலா மறுகோண மடைவாக்கீறி - யவ்வாயி
லகாரமொடு வகாரம்போடு, மறுவில்லாயகாரம்றிங்காரம்போடு-மக
த்தான சிவயநம வென்றேயோது, தெரியாகப்பத்தெழுத்து முன்
னேபோடு - நேரில்மகேச்சரனமேர்மைதேளே, (௪௯)

நேர்மைகே ளின்மலமா கின்றசோதி - நிகழ்த்தரிய மயேச்சுரன்ற னிறத்தின்மேலாஞ், சீர்மைமகி தேவனை நக ளாக்குமாகும்-தெளிவாக வக்கீன்று செபித்தேனையய, நேர்மையா வாசியையீ யிழுத்துவாங்கி-நிலைத்திருந்து கும்பித்து மவுனமாயின், ஆர்மையானமைந்தக்குள் மூலசித்தி - யாதார மவுனசித்தி காணும்பாரே. (௫௰)

## பஞ்சபட்சி.

ஆதார வாயிலது கண்டாயானா - லன்றன்றே பஞ்சபட்சி யொடுக்கங்காணும், வேதார வாயிலகடந் தப்பாற்சென்றால்-வெளியான பரவெளியாம் விசுத்திவீடு, ஆதார வாயிலது வாயுபீட- மங்கென்று தாவென்றும்பு மிறங்கிக்கொள்ளு, சாதார வாயிலென்றே யதற்குநாமஞ் - சச்சிதா நந்தவெளி யொடுக்கமாமே. (௫௧)

ஒடுக்கமாம் வாசிதனை யிழுக்கேகாந்தத் - தகங்கோடி யோகத்தி லிருந்துசேறின், அடுக்குவைய வாசியப்பொழுதேசித்தி - யாதாரயோகசித்தி மவுனஞ்சித்தி, கெடுக்கரிய கெவுனசித்தி ஞானசித்தி- கேசரத்தின் குளிகைசித்தி வாதஞ்சித்தி, வடுப்படலில் வாதபித்தவையஞ்சித்தி - வாமுலா மெனைப்போனி வாமுலாமே. (௫௨)

ஆரவே செங்கீர்தண் பனிநீருண்டா- லண்டவாகவேறலாம்யோகமார்க்கம், நேரவே தூபதிபாதியீந்தே - நேயமாப்பூசித்தான் முத்தியுண்டாம், சீரியமயேச்சுரனம் பிகைமாதோடு - தெரிசனந்தருள்வர்பிரத் தியக்ஷமாகித், தேரியவிசுத்தியின்றன் மூலமாச்சு- செழித்திருக்க வின்னுமொரு செய்திகேளே. (௫௩)

செறிதருசீர் விசுத்தியின் மூலஞ்சொன்னேன் - செம்மைமிகு சதாசிவத்தின் மூலங்கேளு, அறைவரிய வவங்கோண முக்கோணந்தா-மதினடுவின் முக்கோண மடைவாப்போடு, முறையாகமூன்றெழுத்தை முக்கோணத்தின் - மொழிவரியசதாசிவத்தி னெழுத்தைப்போகிட், டுறுதியாசோடசத்தின் விந்துநாத-மோங்கஉங்அங்சிசாவென்றேதே. (௫௪)

## ஆக்கினை.

ஓதவே சதாசிவத்தின் சத்திநேர்மை - யோங்கார செபகம்பமொனநேகாணும், வாதமா வங்கென்று வாசிகொண்டு - வண்மையாக் கும்பித்து மவுனமானால், மோசமே யிலவந்து மோதினாற்போன்-முழங்குமிடிபென்னவே மின்னலகாணும், போதவேபனைவாயிலங்கேதோன்றும் - புகலரியவாககினைபாகந்தானே. (௫௫)

பாகமென்ற பாகமிதைப் போலுமுண்டோ - பரவரியசதாசிவ
த்தைச் சத்தியோடே, ஆகமகிழ்ந்துயர் நூபதிபங்கந்தே-யர்ச்சனைசெ
ய்வேத்தியமுஞ்செய்துபோற்றி, மோகமறமனம்வாக்குக் காயமொ
ன்று-மொழிவரியவிலட்சமுருசெபித்தாயாகில், ஏகமுயர் சதாசிவனு
ஞ்சத்தியுங்கண்-ணெதிர்வந்தபிரத்தியக்கமாவர்தாமே. (௫௬)

தானேதா னும்பரிபூ ரணமானமைந்தா - சாற்றரிய பரைவாயி ல
சையாதோங்கு, வானேவா னளவுபாயி லாசவெற்பு - வளரோமசபை
யாங்கே கண்டுகொண்டு, தானேதாவின்றநிலையறியச்சொன்னேன்-
சதுராக விதையறிய வேண்டுமோயின், தானேதான் றனக்குநிக ருல
கில்யாருஞ் - சாற்றரிய விந்நூலைந் நூறுமாமே. (௫௭)

ஆமேதா னுதார மார்தாங்காண்பா - னையாயிரத் தைந்நூற்றி
னைக்கண்டோர்கள், ஏமேதானின்னூலைமுழுதும்பார்த்தோ-னென்
னைப்போ லாயிடுவான் சாதமாக, வாமேதான் வாமமென்ற முப்பூசி
த்தி - மகத்தானமந்திரங்கள்செபங்கள்சித்தி, சேமேதானெருமைம
லை தோடிருந்தாற்-செப்பரிய செகத்குருவை யறியலாமே. (௫௮)

அறியவண்ட சத்தசா கரமுன்சொன்னே-னதிலிருந்தசுத்தசல
மடைவாச்சொன்னேன், அறியவேயண்டத்திற்பிண்டஞ்சொன்னே-
னறிவரிய வாதத்தின் முப்பூச்சொன்னேன், மறுவிலா மச்சமுனி
யென்னூற்றுக்குள்-மறைத்துவைத்த குருமூலி வகையைச்சொன்
னேன், செறிதருமெய்ப் பொருளமைந்த விந்நூற்கண்ணே - செப்
பரிய சல்லிவேர் சாற்றினேனே. (௫௯)

## சல்லிவேர்.

சாற்றியவோர் சல்லிவேர்முப்பூவாச்சு - தாரணியோரறியவெ
ளியிட்டேனையா, ஆற்றலுடை யிவ்வேரே வெல்லும்வெல்லு- மறு
பத்து நான்குசித்துமிதனாலாடும், நாற்றிசையிலுளசித்தர்யாருமிந்த-
நவிலரியசல்லிவே ரதனைச்சொல்லார், தேற்றமிகு பற்பினியின்கல்
லன்றோசேர்ச்-செகற்குருதன் ஞானவிடக்கல்லாமன்றே. (௬௰)

## குருவண்டு-விடக்கல்லு.

அருமிகுந்தின்னுமோர் செய்திமைந்தா - வண்டத்தின் குருவண்
டை யறையக்கேளு, வாகுபற்பினியினிரு புறமும்வண்டு-வண்மைம

வி விழியதுதான் சொட்டைபார்த்து, வேகமொடுகுளவிபுழு வெடு த்துச்சென்று - வியப்புறவே யதைக்குளவியாக்கவந்த், தேகமொ டு பிறப்புச்சாக் காடுதள்ளிச்-சேகுபெற்றப்புழுவுங் குளவியாச்சே.

ஆச்சுதையா வண்டவோ டண்டமாகு - மரகராநாதவிந்துகுரு வேயாகும், கூச்சமற வம்மூன்றுஞ் சேருமானுற் - குருவண்டு நாபி யென்று மதற்குப்பேராம், பேச்சரியவிடக்கல்லுநாபியாகும்- பெரு மைநிறைமூன்றுப்புழுப்பூவாகும், எச்சிலாவிதனை மறைந்திட்டார்சி த்த-ரொன்றனைப்போல் வெளியிட்டுச் சொல்லாரன்றே. (௬௨)

## நவசித்தர்வாக்கு.

சொல்லாதே யாயிரத்தி லொருநூல்சொல்லுஞ் - சொன்னது மந்நூலே வெளிவிடார்கள், நல்லபயன் றருமென்னால் போலோர் நூலு - நானிலத்தி லில்லையிப் படியார்சொன்னர், கல்வியறிவுடை யகரு வூரார்சொன்னர் - கறையில்குணக் குதம்பைசித்த ரொன்னுநல் லோர், அல்லலறக் கடல்புடைசூ ழுலகுளோர்க - ளறிந்துய்யவறை ந்திட்டா ரருளினாலே. (௬௩)

அருளுடைய விடைக்காட ரநேகஞ்சொன்ன - ரறிவறிந்தவக ப்பைசித்த ரநேகஞ்சொன்னர், தெருளுடையதேரையரநேகஞ்சொ ன்னர் - சேவதத்த னென்றவர்க்குப் பெயருமாச்சு, மருளிலாவிரா மனென்றவர்க்குப்பேரா - மறுவறுசீர்ப் பின்பிறப்பி லிலட்சஞ்சொ ன்னர், இருளறுமிப் பிறப்பிலா யிரத்தோர்நூறு- மின்பமுடன்சொ ல்லிவிட்டா ரின்னுங்கேளே. (௬௪)

## பதினெண்பேர்.

கேளையா யூகியா யுகங்கள்கண்டு-கேதமிகு பிறப்பிறப்பை யொ ருக்கேதள்ளி, கேளையா விக்கொடிய கலியுகத்திற்- கேடிலாவென்ற னக்குச்சீடனானன், கோளிலாவவன்றனக்குளவாம்பேரைக்-கூறவெ ன்னன் முடிவுபெறு தனந்தமாமற், றூளையாவறிவுடையா ரிந்நூலா ராய்ந்-தறிவிக்க மிகவெளிதிவ் வைந்நூறன்றே. (௬௫)

அறைவரிய திருமூலர் சொன்னமார்க்க - மையனே மாநிலத்தி ல் யாவர்காண்பார், குறைவறுசீர்க் கோரக்கர் வெகுநூல்சொன்னர்- கோதிலுபநரோமருஷி கருவாய்ச்சொன்னர், நிறைவுபெறுசட்டை

முனி தெளிவாய்ச்சொன்னார் - நிமலசுந்தரர்சுருக்கமாகச் சொன்னார்
பொறையாதி குணமுடைய போகநாதர் - பூட்டியே வெகுமறைப்
பாப் பாடினாரே. (சுசு)

பாடினார் கொங்கணரு மகேநகோடி - பாரதனி லவையெல்லா
மறைப்பாக்காணும், சூடினார் சுருக்கமையா சொருபானந்தர்-சொன்
னமொழி வெகுவாகும் யாருங்காணார், தேடியே கருக்குருமற் றுள்
ளவெல்லாத்-தெரிந்துகொள வரிதாகமறைத்துச்சொன்னார், பாடினா
ர்பதினெண்பேர்பாடினாலும்-பாலகனேயிந்நூல்போல்வெளியிடாரே.

வெளியாகச் சொன்னவொரு வேதாந்தத்தை - மிகத்தெளிவா
மைந்தாங்காண்டத்திற்பாரு, தெளிவுடைய சித்தருக்கிந்நூயிராமை
ய-செப்பினே னிதையறிந் தடக்கம்பண்ணே. அளியோடுகருக்குரு
மற் றனைத்துஞ்சிரா - வறைதருநாலாங்காண்ட முழுதும்பாரு, களி
யோடு குருமொழியா வைத்திந்நூலைக் - கண்டுதெளிகுருமுறைகட
ம்மையன்றே. (சுஅ)

ஐந்நூற்றிற் சொன்னபடி செய்தாயானா - லப்பனேவாசியது
புராணதென்றும், ஐந்நூற்றி னுன்சொன்ன படியார்செய்வா-ராயிர
த்தில்வாதவித்தை யார்தாஞ்செய்வார், ஐந்நூற்றிற்கருக்கண்டு செ
ய்யவல்லார்க்-காகாதபொருளுண்டோவடைவாப்பாரு, கைந்நெல்லி
க்கனிபோன்முப் பதனிற்சொன்ன - கருத்தெவர்களறிவர்யுகங் கலி
யாமன்றே. (சுகூ)

கருகரிய சித்தர்நம கிலையைச்சொன்னேன் - கணக்காகவாதார
மாறுஞ்சொன்னேன், மருவரியமவுநசிவ யோகஞ்சொன்னேன்-மக
த்தான வாசிநிலை யொடுக்கஞ்சொன்னேன், அருவானபஞ்சகர்த்த ர
வையுஞ்சொன்னே - னறிவரியவட்சாத்தி னிலையைச்சொன்னேன்,
துருசிலாத் துருவத்தின் மேருஞ்சொன்னேன் - றலாராசியடுத்தவர்
க்கே பலிக்குமன்றே. (எ௰)

## மும்மண்டலம்.

அடுத்தக்கா லாதார மாறுமாகு - மறுமுகவனருளினாற் றெளி
வுண்டாகும், மடுத்தக்கான் மண்டலங்கண் மூன்றுங்கேளு- மகத்தா
ன வென்றன்வாக் சமுசவாக்கே, கடுத்தக்காற் கோடியநம னணுகா
னையா - காசினியி லியுமொரு குருவாவாய்கான், படுத்தக்காற்பரம
ண்ட லத்தின்சோதி - பார்த்தக்காற் றெரியுமது சொல்லக்கேளே.

## சூரியமண்டலம்-சந்திரமண்டலம்.

சொல்லுக்கேள் பரமண்ட லத்தைத்தாண்டிச் - சொற்பெரிய வாசியைநீ தம்பித்தக்கால், அல்லகற்று மாதித்த மண்டலந்தா- னதி லுள்ளே யகாரமோ டுகாரபீடம், சொல்லரிய கதிரிரவி கோடாகோ டி-சோதிகலா நிதிகோடி காணும்பாரு, அல்லலற வாசியைநீ யிழுத் துப்பார்த்தா - லப்பொழுது தேகம்விளக் கொளிபோலாமே. (எஉ)

ஒளிபெருகு சூரியமண்டலத்தைத்தாண்டி - யுற்றுப்பார்த்திடி ன்ஞானக் கண்ணினாலே, களிர்பெருகுசந்திரமண்டலமுங்காணு-நா னிலத்திலெவர்சொல்ல வல்லாரய்ய, ஒளிர்கிரணநிறையிரவி கோடி காணு - முரைப்பரிய சந்திரமன் டலத்திலாங்கே, குளிர்ச்சிமிகு சோதிமின்னல் போலக்காணும் - கூறரியவப்பிறையே வீடுமாமே.

வீடான மவுனமையா வங்கென்றூன்றி - விளங்கவேசெபித்து நீகும்பித்தக்கால், கோடானகோடிரவி யொளியேகாணும்-குருவிரு ந்தாரவர்பெருமை யென்னசொல்வேன், வேடானுலொருவரால் வெ ல்லப்போமோ - வேதாந்த சொருபநிலை காணப்போமோ, ஆடான வாணவங்க ளற்றுப்போனு - லப்பொழுதே மாயையெலா மகன்று போமே. (எச)

போச்சப்பா பிறப்பிறப்பு மாண்டுபோகும் - புகழுடைய வரத னம்போன் மேனியாகும், வாய்ச்சுதுபார்வாசியது நிலைத்துப்போகு ம் - மகத்தானகாயமது பெலத்துப்போகும், கூச்சமுறேறார்க்குண நற் குணங்களாகும் - கோடானகோடியுகம் வாழலாகும், ஆச்சுதுபா ர்வாமத்தால் யோகமாகு - மவையன்றியொன்றுமில்லைகாயம்பாழே.

காயமாம் ஒங்கார மூலாதாரங் - கண்டுநமசிவாயமந் திரமுமாச் சு, மேயமூ லத்தினகாரமொடுகார - மேலானமகாரமது மூன்றேமூ லம், நாயகமாமொன்பதிலே பஞ்சகர்த்தர் - நலமானவான்மாவுமுயி ரோயாகும், ஓயமாமோமென்று செபித்தாயானு- லுகங்கோடிகாயம து பெலத்துப்போமே' (எசு)

## பூரண ஏகாட்சரம்.

பெலத்துப்போம் பூரணத்தைச் சொல்லக்கேளு - பேரான சூ க்குமத்தைப் புகலுகின்றேன், அலுத்துப்போம் அகாரமோடுகாரபீ ட-மதினடுவே ஒங்காரமடைவாப்போடு, வலுத்துப்போ மதினடுவே

மகாரம்போடு - மகாரத்தினடுவேதா னகாரவட்டம், ஒலித்தேஉம் மென்றறிங்காரம்போய்விட் டோங்காரவட்டத்திற் சூலம்போடே. ()

வட்டமாயிருபக்கஞ் சிங்குவங்கு - வகையாகவிருபுறமு மடைவாய்ப்போடே, அட்டமாதிக்கினிற் சூட்சாசூட்ச - மண்டாண்டபிரண்ட மிதற்கொவ்வாதே, சட்டமாஞ்சங்கமென்ற அகாரமாச்சு-சதகோடி மந்திரமுமிதுவேயாச்சு, திட்டமாவெட்டெழுத்து மிதுவேயாச்சு - தெட்டெழுத்தாமிதற்குள்ளே யொடுக்கமாச்சே. ()

## அட்சரபலிதம்.

ஆச்சுதுபார்மவுனசிவ யோகதீட்சை - யண்டசராசரங்களெல்லா மடங்கிப்போச்சு, பாய்ச்சுதுபார் பராபரமா மவுனதீட்சை-பாடினேன்பூரண காவியத்தைப்பாரு, எச்சிலாவென்பாடன் மவுனஞான-மெய்த்துவிக்குமறவாதே யின்னுங்கேளு, வாய்ச்சுதுபார் கருவிகாணுதியான - கருவிருந்ததலங்களிலே கண்டுகொள்ளே. (எசூ)

கொள்ளையா வட்டகன்ம மாடவென்றாற் - கோசமாமிவ்வெழுத்தைக் குணமாப்போடு, அள்ளியாவஞ்செழுத்தாற் றியானம்பண்ணே - யதற்குநிகரில்லையெல்லா முனக்குச்சித்தி, வள்ளலிக்கவாசிவழு வாதுபாரு-மகத்தானபெரியோர்கள்சொல்லாணையா, விள்ளரியவேதாந்தக் கிந்நூல்வேண்டும் - விவேகமில்லா மானிடருக் குதவாதன்றே. (அய)

## நின்மலதெரிசனம்.

உறவாக நிர்க்குணத்தை பொட்டிப்பார்த்தே - ஞேரிடத்திற் சோதியின்ன லடைவாய்க்கண்டேன், பொறையோடுபூசித்துத்தெரிசித்தேன்வன் - புகழ்மலிந்தவதுகடந் தப்பாற்சென்றேன், முறையாகநின்மலத்தைப் பார்க்கவென்றான் - முடியாதென்றெண்ணி மெய்ஞ்ஞானக்கண்ணி, னெறியாகநின்மலமாஞ் சோதிகண்டு - நேசித்துப் பூசித்துத் தெரிசித்தேனே. (அக)

தெரிசித்தேன் குளிகைகொண் டேறிப்பார்த்தேன் - சிவசிவா பூரணத்தை யறிவாற்கண்டேன், பரிசுத்த தலமென்ற பதியுங்கண்டேன் - பாலமுதமதனப்பா லமுதுகொண்டேன், அருச்சித்தேனகண்டமென்ற பிண்டமைபா - வமுதாதிதெரிசனந்தான் மோக்கம்பெற்றேன், தரிசித்தேபற்பநதிக் கப்பாற்சென்றேன் - றுவிலா றுதாரசபைகண்டேனே. (அஉ)

சபையென்றாற் சபையதுவோ வாறுதாரஞ் - சதகோடிசித்தர் களுங் காண்பர்கொல்லோ, தபுதலிலாவறுமுகவன்கடாட்சத்தாலே- தரிசித்தேன் சிதம்பரத்தைத் தொண்டுசெய்தே, அபயமென்றே சி தம்பரத்தி லன்புளங்கொண் - டாயிரத்தெட்டிதழுதனு லர்ச்சித்தே னுன், நிபுணாஞ்சபையாளக் கண்டேயப்பா-னேராகவாசிகொண் டேறினேனே. (அ௩)

## சித்தர்கள்தர்க்கம்.

நேராக வேறுகையிற் பொதியில்வாழு - நிமலகுணவகத்தீசர்வ ருகவென்றார், நீராகவாயிரவர் சித்தர்கூடி - நிலையுடையேன் றனைம தித்துத் தர்க்கஞ்செய்தார், சீராகச் சித்தர்கடா நீயார்மைந்த- செப் புகவென்றேயென்னை வினவினார்கள், பேராக வறுமுகவன்சிடனெ ன்றே-பேரண்டவாசிகொண் டேறினேனே. (அ௪)

ஏறினேன்பேரண்ட வாசிகொண்டே - யேழுகையிலாயிரம்பே ர் சித்தர்கூடி, மாறினேன் றனைவெளியிலடக்கிக்கொண்டு - மகத்தா ன போர்செய்தா ரநேகம்பேர்கள், மீறினேனேன்றாற்றி னனுபவத் தை - மீதண்ட வண்டத்தி லேறும்போதங், காறினே னவருட்னே தர்க்கஞ்செய்தே-யண்டரண்டங் கடந்தப்பாற் பாய்ந்தேன்மன்னே.

## அண்டரண்டநவகண்டம்.

பாய்ந்தண்ட ரண்டமதைக் கடந்தப்பாலே - பரிவாக நவகண்ட் மேறும்போது, தோய்ந்தசீர்க் கொங்கணவன் றன்மாணக்கன் - றாக ளிலாவைந்நூறு பேர்களோடே, ஆய்ந்தென்னைச் சேர்க்கவைந்நூ றுபேரு - மடைவாகவினவியநல்வினக்கட்கெல்லாம், ஏய்ந்தவிடை் கொடுத்தாப்பாற் செல்லும்போதங் - கெய்தினார்குளிகைசித்தர்கோ டிமாதோ. (அ௫)

## சதகோடிகுளிகைசித்தர்தர்க்கம்.

கோடியாஞ் சதகோடி குளிகைசித்தர் - கூட்டமா வெனைமட் க்கித் தர்க்கஞ்செய்தார், தேடி யையாயிரத்தை யெடுத்துக்காட்டித்- தேயத்தி லெய்தரிதா மவுநங்கொண்டேன், கோடியா மலர்களைத்தா மவுநமேகங் - கூறுமுகாந்தத் தெழுமோ சிருள்போன்மூட, மூடிய தை யான்கடந் தப்பாற்சென்றே - முன்கண்டு சிதம்பரத்தைத் தரி சித்தேனே. (அ௭)

சிதம்பரமாங் கனகசபை யாருங்கண்டேன் - தெளிவானபுலத் தியனே மகிமைபாரு, கதம்பரமாங் காவியத்திற் பஞ்சகாவ்யங்-கரு க்குருநாலாங்காண்டங்கண்டுசொன்னேன், எதம்பரமா-மென்னசொ ல்வேனின்னுஞ்சோதி - யென்மகனே புலத்தியனே யின்பாக்கேளு, குதம்பரமாங் கோடான் கோடிவித்தை - கூறுவேன் குருவருளாற் கூறுவேனே. (அஅ)

## பூசைக்குறிப்பு.

கூறுகின்றே னாதார பூசைமார்க்கங் - குணமான வாயிரத்தின் மவுனபூசை, விறுகின்ற மவுனத்தில் யோகபூசை - விள்ளரிய கெவுன சித்துக் குளிகைபூசை, மாறுகின்ற வாசிசித்து ஞானபூசை - வளமா னவாதசித்து குருவின்பூசை, தேறுகின்ற காயாதி கற்பபூசை-தெளி ந்தவர்க்குச் சிவபூசை தெரியும்பாரே. (அகூ)

பாரையா மவுனத்தின் பூசைசொன்னேன் - பாலகனேயாதார பூசைசொன்னேன், தேரையா சிவயோக பூசைசொன்னேன்-சிதம் பரத்தின் பரபூசை தெளிவாச்சொன்னேன், சீரையா மெஞ்ஞானபூ சைசொன்னேன் - செப்பரிய சற்குருதன் பூசைசொன்னேன், ஓ ரையா சிவபூசை யடைவாச்சொன்னே - னுத்தமனே யான்செய்யுந் தியானங்கேளே. (கூய)

உத்தமனே கேட்டிடுவாய் கருவாச்சொல்வே - னுரைப்பரிய பொருளையா குருவாஞ்சூட்சம், சித்தான வருபமையா சொருபசித் தி - செவ்வனளித்திடுதெய்வ யானைதோள்சேர், அத்தமீராறுடைய வையன்றியான-மவனேசற்குருவெனக்கா மறிவையைய, பத்திமையா முதண்டக்கருவைக்கேளு-பகரரியவோங்கார பீடங்காணே. (கூக)

காணுவாய் குருவருளா லதன்னையையா - காணரிதுகாணரிதுகண் டேன்யாரும், ஏணமர்சின் வஅஉங் மங்கென்றன்பா - விம்மனு வை யையசீ யோதுவாயே, மாணவே சுழுமுனையில் வாசிகொண்டு- மகத்தான முக்கோணம் வலமாவந்து, ஏணியா விடைகலையில் வாசி யோட்டி - யேறுவாய் துரியத்தின் மேலேமன்னே. (கூஉ)

துரியத்தின் மேலேறிப் பாய்ந்தாயானாற் - றுகளில்பிராணுபா மந் துரியங்காணும், பிரியத்தோ டங்கென்று கும்பித்தக்காற்-பேச ரிய வொளிவட்டப் பிரபைகாணும், தெரிவரியவாதாரமாறுங்காணு ஞ்-செப்பரிய சிதம்பரத்தின் பீடங்காணும், புரியத்துப்பூரணமாஞ் சோதிகாணும் - பூரணத்தின்மனக்கண்ணை யோட்டிப்பாரே. (கூங)

ஒட்டிப்பார்பூரணத்தின் மேலாதார - மோகோகோ தெரியுமறு சபையுமங்கே, தாட்டிகமாவறிந்தென்று தம்பித்தக்காற் - சதகோடியுகமளவும் வாழலாமே, நாட்டப்பார்பளிச்சென்றுதலமுங்காணு-நண்பாகப் பராபரத்தைப்பூசிப்பாயே, கோட்டமிலாதியான்செய்யுந் தியானஞ்செய்தாற் - குணமுடையோ யொருநாளுங் குறைவராதே. (கூச)

வருமினிய பயனெல்லாந் தியானத்தாலே - வச்சிரம்போற் காயமது பெலத்துப்போகும், தெருமரோ வுடலதுவச் சிரம்போலாயிற் - றேசிபென் றதற்கோர்பே ருளதாமற்றை, அரியசிரட்சரங்கள் சித்தியாகு - மாகாரஞ்சித்திபடா யோகஞ்சித்தி, துருவமெனுந்துரியமொடு துரியா தீதந்-துகளிலாச் சித்தர்களே காணுமன்றே. (கூரு)

## சாதி-தேயம்.

காணுமே காணரிய துரியா தீதங் - காசினியி லாரறிவார்வழலை மார்க்கம், கோணலிலாக் கேசரத்தின் சாதிசேரு - கூறரியசாதிநான்காமவற்றுள், மாணெழில்சே ரத்தினிவண் சோழதேயம்-வடிவேற்கட் சங்கினிசீர்ப் பாண்டிநாடாம், ஏனுயர்சித்தினிசேரனுளுந்தேய - மென்மகனே பதுமினியோன் காசிமன்றே. (கூசா)

## தேயவளப்பம்.

மன்னியவர் வாழ்தேய வளப்பந்தன்னை - வழுத்துகிறேன்புலத்தியனே யன்பாக்கேளு, பன்னரிய சோழவள நாட்டின்வண்மை-பசும்பொன்போற் றனிருக்கும் பாருபாரு, துன்னரியபாண்டிவளநாட்டின்வண்மை - சொல்லரிய பச்சைபோற் காணுமையா, மின்னுமணி முடிச்சேர னுளுந்தேய-மேலான வெண்மைநிற மாகுந்தானே.

தாமையா ளிகடல்சூ ழவனிமீது - சாற்றுமொரு கறுப்புவன்னங் காசிநாடு, நாமெய்யாநான்கினது நிறமுஞ்சொன்னே-நாதர்கடாமறிவர்மற் றவர்காண்பாரோ, காமையாகாசிவள நாட்டுப்பெண்கள்-கற்புடையா ரவரினாஞ் ஞூறுபேர்கள், ஆமையா வவர்கடமக் குள்ளேயெல்லா - மாய்ந்தெடுத்தோ மாயிரத்தி லொருத்தியாமே (கூஅ)

ஆமவட்ன் சாதிபது மினியாஞ்சாதி - யவளுடைய விராசிதனைக் கருதிநோக்கின், சேமமுடை பவடன திராசிகன்னி - செம்ம

லே யவர்ராசி துலாமுமாகும், வாமமிகு மவள்வயது பதினாறும்-வாலிபமா மமுதப்பெண் கூடுநாளில், தாமமிகு சித்திரையா மாதந் தன்னிற் - றனிச்சுக்ர வாரத்தி லுதித்தாள்பாரே. (கூகூ)

பாரேசீ பஞ்சமிபா முத்திரத்திற் - பால்போலே காயுமந்தப் பருவந்தன்னில், மாரேசீ மத்யானம் பதினேழ்க்குண் - மகத்தான சதிபுருடர் கூடுநாளில், கேரேசீமூன் றுதிங்களாகும்போது-நிறையாக நாதவிந்து திரண்டெழுந்தே, ஆரேசீ யஞ்சுதிங்க ளம்மாவாசை-யரகரா பூர்வபட்ச ஞாயிறுமே. (ள)

ஞாயிறு மைந்நூற்றிற் பலிக்குஞ்சித்தி - நாதர்கடா மறைத்த நூல் குருநூலாமால், ஆயிரமை யாயிரத்தை யாய்ந்துநோக்கி-ஞானதொகை யைந்நூற்றி லடங்கிப்போமே, ஞாயிறுபோல் விளங்குமென்ற னமுதவாக்கா - நவரத்னநால்வேத முழுதுஞ்சொன்னேன், ஆயிரத்தி லறைகருவின் சூட்சாசூட்ச-மாதியெலா நவின்றன்காங் காண்டமுற்றே. (ளக)

## நாலாங்காண்டம்

முற்றிற்று.

உ

கணபதிதுணை.

---

அகத்தியமுனிவர்

அருளிச்செய்த

# பரிபாஷைத்திரட்டு.

## ஐந்தாங்காண்டம்.

### காப்பு.

ஆதிநடுவந்தமிலாப் பொருளைமுக்க-ணமலனையெண் டோளனை
யம் பலத்திலாடும், சோதியைநின் மலனைநிரா மயனைமேனாட்-சுந்த
ரர்க்காப்பரவைபாற் றூதுசென்ற, கோதிலுமாபதியைபசு பதியை
த்தூய - குணக்குன்றை யருட்கடலை யிமயவெற்பு, மாதியலும்பாக
னையன் போடுபோற்றி-மாசிலைந்தாங் காண்டமதைவாய்விட்டேனே

வாதமெனு நூற்கெல்லாங் குருநூலாகும் - வருந்தியிந்த வைந்
நூறுங் கருவாப்பாடிச், சாதகமாப்பரிபாடை யனைத்துமேமார்த்-தா
ண்டனெனவிளக்க வைந்தாங்காண்டத்தில், பூதமெனுமைம்பூதநிலை
யைக்கண்டு - போதவேவாசியொட்டி யறிவினாலே, காதவழிபோகா
மற் கருத்தேடாமற் - காலறிந்துநிலையினின்று கருதினேனே. (௨)

ஏதமிலொண் பூரணத்தா லுலகமாச்சு - நியம்பரிய பிருதுவி
யாற் பிண்டமாச்சு, வேதமெனு நிராமயத்தாற் றேயுவாச்சு- விளங்
கிநின்ற வாசியினா லறிவுண்டாச்சு, வாதமெனும் வாசியினால்வாயுவ
ண்டம் - வகையறிந்தா லாதியினாற் சத்தமாச்சு, பூதமென்ற போத
மதை யறிந்தாராகிற் - பூபதியோகம்பெற்று வாழ்வர்தாமே. (௩)

வாழ்வுடையோ யறிவுடையோய் பொறையின்மிக்கோய்-வழு
த்துநற் குணமுடையோய் வாய்மையோனே, கீழ்மையிலாப்புலத்தி
யனே சொல்லக்கேளு-கேசரியின்வித்தைதனை யார்தாஞ்சொல்வார்,

அழ்நடல்ரூ முவனிமிசைக் குக்கல்போல - வாடுமாடுகள்போலத் திரிவாரல்லால், காமறிவாலண்டமெனுங் கல்லைக்காணார்-சமறும்வெள்ளைக் கல்லதனைக் காண்பார்கொல்லோ. (ச)

காணாத பிண்டமெனுங் கல்லையந்தக் - கருவறியா மதியிலிகள் காணமாட்டார், கோணாத வுருவதுவு முருபாருபங் - குறும்பரோவ ரிவர்க ளறியமாட்டார், ஆணுய ரூபமந்தா கோடாகோடி-யாயிரத்தெண் கலையிலோரண்டசோதி, வணுகுங்கருவதுவோ பிண்டாபிண்ட - மிப்புவியின் மாந்தருக்குச் சாராதன்றே. (ரு)

சாருமே சற்குருவாஞ் சகலத்துக்குஞ் - சதுர்வேததீட்சைகுரு சொல்லவேண்டும், சீரியசற்குருவையடுத்தன்புசெய்து - செகற்குருவின் வாக்கியத்தைச் சோதித்தேறு, ஓரியலுமில்லாத பாவிகட்கே யோதுவரோவொருநாளுமோதார்சற்றும், ஏரியல்சற்குருவை யடுத்தன்புசெய்தே - யிலப்புமோர்பன்னிரண்டாண் டளவுந்தானே.(சு)

## பூரணவழலை.

தானேதா னண்டமது தெரிந்தாலன்று - தானன்றோ சிவசித்தன் ஞானியாவான், பானேதான் பரப்பிரம மதுவேயாச்சு - பராபரமாம் பரவெளியு மதுவேயாச்சு, கானேதான் கருவிகாரணுதியாச்சு-கருவுதித்த பிண்டமெனுங் கல்லுப்பாச்சு, வேனேதான் விந்துவுக்கு நாதமாச்சு - விந்துசத்தி யுப்பாச்சு விரமாச்சே. (எ)

ஆச்சுதே யண்டசத்தி சிவமுமாச்சு - தாதியாநாதவிந் திரண்டுமாச்சு, போச்சுதே பூரணமு மிதுவேயாச்சு - பூரணமாமெழுத்ததுவு மிதுவேயாச்சு, வாய்ச்சுதப்பா வழலைக்கோ ராதியாச்சு-வளமான முப்பூவு மிதுவேயாச்சு, தாட்சியிலாச் சாதியென்ற பிரவியாச்சு- சதகோடிவித்தையெல்லா மிதற்குள்ளாச்சே. (அ)

உள்ளான வடிமூல மிதுவேயாச்சு-தோங்காரமுடிமூலமிதுவேயாச்சு, விள்ளொணு சுழிமூல மிதுவேயாச்சு - விரிமூலாதாரமென்ற சாரமாச்சு, கள்ளான சிவசத்தி மூலமாச்சு - காரததின்சவுக்காரவுப்பதாச்சு, அள்ளான வாதார வண்டமாச்சு - தடிமுடியை யறிந்தவனே யாசானுமே. (கூ)

## பூமிநாதபிண்டம்.

ஆசானும் பூமியுடை நாதநாத-மப்பூவிற்றுனிருந்த வண்டபிண்டம், தேசானும் பூமியுடை வன்னங்கண்டு - தெளிவானபக்குனிசித்திரையைக்கண்டு, கோசானும்பூருவபத்பினியாஞ்சோதி- கோமேத

விரத்தினம்போ லுதித்தாள்பாரு, காசாளு மண்டலத்திற் பிண்டமா ச்ச - கருவிகர ளுதிகளு மிதற்குள்ளாச்சே. (௰)

ஆச்சுதே யண்டசரா சரத்தின்பிண்ட - மாகாகா சொல்லுகி றே னுதியாகி, போச்சுதே யைஞ்சுதிங்க ளானபிண்டம்-பொருளா ன வண்டத்தின் கல்லேவாங்கி, நாச்சுதே நாதசத்திவிக்கெடுத்து-ஈகி லுகிறேன் பாண்டத்தி லன்றுப்போடு, வேச்சுதே வேல்விழியாளு தநதன்னை - விளங்கிரத்தின பாண்டத்தி லிட்டிடாயே. (௰க)

இட்டிடுவாய் வெவ்வேறே பாண்டந்தன்னி - லென்மகனேதவ ருதே யின்னுங்கேளு, முட்டிடுவாய் முன்சொன்னசிவத்திணுப்பை-முறையாகச் சொன்னெனிரண் டாங்காண்டத்தில், நட்டிடுவாய் ப ணவெடைகா னெடுத்துமைந்தா-நாதசத்திவிக்கிலிட வமுதமாமே, அட்டிடுவாயமுதசத்தியண்டத்தோடே-யழகானநாதநீர்கூடச்சேரே

## கைபாகசெய்பாகங்கள்.

சேர்த்திடுவா யிரண்டையுந்தா மொன்றுச்சேர்த்துச் - சிராகக்க ல்வத்திலிட்டுமைந்தா, ஆர்த்திடுவாயமுதமென்றகுழலிகொண்டே-யாட்டிடுவாய்குருசலததை மூன்றுசாமம், * ஓர்த்திடுவாய் பராபரி யைத் தியானஞ்செய்தே - யோமென்ற மந்திரத்தா லாட்டிப்பாரு, ० கூர்த்திடுவாய் மூன்றுநாள் மூன்றுசாமங் - குணமாக வாட்டிடுவா ய் கருப்போலாமே. (௰௩)

ஆமேதான் கருத்திரண் டுருவாய்க்காணு - மைஞ்சுதிங்கட் பி ண்டமென்று மிதற்குப்பேரு, தேமேமூன்றுக்காண்டத் தெடைபா கந்தான் - றெரிவருபஞ்சிகரண திட்சை சொன்னேன், கோமேவுப ஞ்சகர்த்தர் திட்சையாலே - கொடுமைசெறி யைம்பூதக்கல்லுமாச்சு காமேவு மிக்குருவைக் கலக்கிநீரிற் - கண்மணியேதெளியவைத்திறு த்துக்கொள்ளே. (௰௪)

கொள்ளவென்று மிக்குருவை யெடுத்துக்கொண்டு - குருவாக ப் பாவித்தே யடுப்பிலேற்றிக், கொள்ளவென்று மிக்குருவைக்குமு றக்காச்சிக்-குருவான குருசெயநீ ரிறக்கிக்கொண்டு, அள்ளவென்று லாறவிட்டுக் குருநீர்விட்டே - யாகசாதெளியவைத்தெடுத்துப்பாரு, மொள்ளவென்றுன் முத்துப்போற் கண்விட்டாடு-முனியுரைத்த வா லேரச மென்றபேரே. (௰௫)

---

* ஓர்ந்திடுவாய்- ० கூர்ந்திடுவாய் என்பன—ஓர்ந்திடுவாய்- கூர் ந்திடுவாய் என விகாரப்பட்டன.

போான விச்சலத்தின் றெளிவிருத்தாற் - பேரொளியாம் பர ப்பிரம பிண்டங்காணும், காரானகதிர்போலே யுருவங்காணுங்-காய வைப்பாய் ரவிதனிலே குருவைக்கொண்டு, சிராகவுலரவைந்தவமு தத்தாலே - திறமாக விக்கருவைச்சுழற்றிடாய்நீ, ஆரானவமுதசுத் தி யிரண்டதாச்சு - தடைவானலுநிநீ சிசுற்குப்பேரே. (௫௬)

பேரொன்ற விக்கருவைத் தெளியவைத்தாற் - பெலமான வமு தமையா மூன்றுஞ்சுத்தி, காரொன்ற கருவதுவு மிரவிதன்னிற்-கண க்காகக் காய்ந்தநேரற் கசிவற்றுப்போம், வாரொன்ற மாக்கருவையெ டுத்துக்கொண்டு - மகத்தான வுசிநீர் தன்னிலிட்டுத்- தேரொன்றுமெ தவியவைத் தெடுத்துக்கொண்டு - சிரானவிரவிதனில் வைத்திடாயே.

வைத்தவித்தக் கருவிரவி தன்னிற்காய்ந்தால்-வழுக்தரியவுரோ மநீர் மகத்துவத்தால், கைத்திடுமக் கசிவெல்லா மிறங்கும்பாரு- கற் றவர்களறை கருமோ ரண்டவுப்பில், வைத்திடுவா யெனிலாகுநாலா ஞ்சுத்தி - வண்மையாக் கருவெடுத்து ரோமநீரில், ஐந்தாகச்சுழற்றி யே யிறுத்துக்கொண்டே - பதிவிறங்கு மமுதமன்றோதேசிநீரே. ()

நீரான கருவதுவும் ரவியிற்காய்ந்தா - னிகழ்ந்திடுமோர் தேசி நீரொன்றேபோரும், காரான கருவதுகா லாங்காண்டத்திற் - கருமூன் றும் காண்டத்திற் குகைபின்சுன்னம், ஆரான வைஞ்சுதிங்கட்பிண் டமாச்சு - தமுகான கருச்சுன்னத் தறிந்துகொண்டு, சீரான கருவெ ன்ன வென்றுலையா - தேசிநீ ரமுதத்தைக் கருவில்விட்டே. (௫௬)

விட்டதனைச் சுழற்றியே தெளியவைத்தால்- விஞ்சைம்மூலம் மிறங்கு மிறுத்துக்கொண்டு, திட்டமாக் குணமுடையோய் மாசிலா த-சொவி லேயநீ பரவைப்பண்ணு, முட்டிலாப்பிண்டகரு வெடுத்துக் கொண்டு - மொழிவரிய விரவிதனிற் காயவைக்கின், விட்டோடுங் கசிவெல்லா மற்றபின்பு - விளங்குமந்த வுப்புமிகப் படருமன்றே.()

## சத்தியுப்பு-சிவவுப்பு.

படருமே யிம்முறையா ரவியிற்காய்ந்தாற்-பத்தான நாதசுத்தி பாத்தோடொக்கும், அடருமே சிவசத்தியிதுவேயாகு-மரகராவை ம்மூல மிதுவேயாகும், இடரிலா விந்தவுப்புச் சத்திசொன்ன - வெ ன்மகனே யான்கண்டே யுனக்குச்சொல்லேனன், படருமிந்தவுப்பினை யு வன்னையையா - பகரிய வெள்ளையது சொல்லப்போமோ. ()

சொல்லமுடி யாதவெடி யுப்பதாச்சு - துகளிலந்தவுப்பினிற மி ன்னுந்கேளு, கல்லருண முடையபுலத்தியனேசுத்த - நற்பளிங்குச்

அன்னம்போ லிருக்கும்வெண்மை, புல்லுபூரண மதிபோலிருக்கும் பாரு - புகலரிய வுப்பினது காரசாரம், மல்லன்மிகு மரத்திலொரு தொளையிட்டந்த - மகத்தான வுப்பதனைப் பணம்போல்வையே. ()

வைத்தையா பரிட்சைசெய்து பாருபாரு - வழுத்துமொரு வாரமதிற் பட்டுப்போகும், பத்தியா விதிசெய்தி யின்னுஞ்சேரு - பதனமதாவுப்பினது முறைமைமுன்னே, கைத்தல வாதிகட்குச் சொன்னேனன்று - கனமான சிவசத்தி மகிமையாலே, உத்தமனே நூற்கெல்லா மாதியாக-வுற்றவிந் நூல்போலே யொருநூலுண்டோ.

இந்நூல்போ லெந்நூலு மில்லையென்கு - மிந்நூலே யெந்நூற்கும் குருநூலாகும், அந்நூல்போ லெந்நூலார் சொல்லவல்லா-ராதியெனுஞ் சோதியையா பரமாஞ்சோதி, மைந்தனே யிம்மூன்றுங்கூடினக்கால் - மகத்தான முப்பூவு மிதுவாம்பாராய், என்னுளே யெட்டிரண்டும் பத்தேயாகு - மிதனாலே சாபமது நீங்கிப்போமே. ()

## சாபநீக்கல்.

நீக்கியே தென்மேற்குச் சிவந்தபூமி - நேராகமைந்தநீ சென்றேயன்பா, நோக்கவே வேண்டுமென்றுற் சொல்லக்கேளு-றுவலரிய வென்னுடைய தியானங்கண்டு, போக்கியே போகாதே நினைவாய்க்கொண்டு - புகழுடையவிந்தரகிரிதனைநேர்கண்டே, * ஏக்கிநீ யலையாதே யின்னுங்கேளா - யென்மகனே சித்திரையா மாதந்தானே. ()

## பந்தர் ஓமகுண்டம்.

மாதமென்று வாடாதே பதினைந்துக்கு-மகத்தான வுத்திரமென் றுனாசெய்நாளில், நாதமென்ற பூருவமாம் பட்சந்தன்னி - னன்மைபெறு சுக்கிரனுங் கூடும்போது வேதமெனும் விலாசத்தின்பூமி கண்டு - வேகமுள்ள மேல்காற்று வீசுங்காலே, பாகமென்ற பந்தரது பச்சைப்பந்தர் - பரிவாகமேடையுயர்வாகப்போடே. (உஎ)

உயர்வாகமேடையிட் டோமகுண்டத் - தொளிர்பக்கான்கினுமோர் வாயில்கோலி, அயர்வறவக் குண்டத்தி னாந்துநாளு - மடைவாகத்திட்சைமந்திரஞ்செபித்தே, நயமாகச்சலமதனை யதனுள்வார்க்கி-னன்றுநப்பூதூத்துச் சொரியும்பாரு, மயலறவேபிங்கானிற்கொண்டுவந்து - வண்மையுடனிரட்டிப்பா வதனுட்போடே. (உஎ)

---

* ஏங்கியென்பது - ஏக்கியென எதுகைநோக்கி விகாரப்பட்டது

## கங்கைச்சமாதிதீட்சை.

போட்டுபெஞ்ச வமுருதனை யதனுள்வார்த்துப் : புகல்பத்துக் கொண்றேயா காசபிசம், கிட்டியம் மேடைக்கு நடுவேவமைந்த - கிளைவாகச்சமாதியிலுப்பெடுத்துவைவயே, தாட்டிகமாச்சொல்லிவிட்டே னெளிக்கவில்லை - சாற்றரிய வப்பந்தர் தனக்குநாப்பண், கோட்டமறப் பனிவிழுமப் பதத்தில்வைத்துக் - குழிவெட்டிப் பூமிக்குண் முடிப்போடே. (௨௮)

மூடியே யன்பாகக் காலைமாலை - மொழிவரியசத்திசிவ தீட்சையோது, யாடுவாய் தீட்சையொருமண்டலந்தான் - பத்திமையா விருந்துகொண் டதனையோது, நீடியவோர் மண்டலத்திலண்டபிண்ட-விகழ்ந்தரிய பூவதுதான் பூக்கும்பாரு, வாடியேயிதைவிட்டுப்பூநீர்தேடி-வலையிதுவாமென்றெண்ணிக்காய்ச்சினரோ. (௨௯)

## உலகவாதிகளின்குணம்.

காய்ச்சினலண்டபிண்டமாகுமோதான் - கண்கெட்டமடையர்களே காரமாமோ, ஆச்சென்ற வுப்புத்தான் பூத்தபூவா - மைந்தாற்றிற் காப்பாதி கடையும்பாரு, பாய்ச்சுகையிற் பழமாகுமண்டலத்திற் - பயனறிந்துபற்பினியின் றீட்சையோதின், எச்சிலாக்கடினமகாவெச்சரிக்கை - யிடறுவந்தணுகாமற் றீட்சையோதே. (௩௰)

தீட்சையைநீ மறந்துவிட்டாற் சவமாய்ப்போவாய்- செகற்குருவின்சாபமது பலிதமையா, தீட்சியாம்வெகுகடினம் பெரியோர்தமை-நேசித்தே யவர்கண்மன திரங்கச்செய்தே, ஆட்சியாக்கைபாகந் தீட்சைபாக-மடைவாகவவருணர்த்தவறிந்துகொள்ளு, சாட்சியிலாப் பரிபாடைபிரமகற்பந்-தனங்கோடிகொடுத்தாலுஞ்சொல்லாரன்றே.

## பிரமகற்பம்.

சொல்லாத பொருளையா பிரமகற்பஞ்-சொல்லாமன் மலறத்தார்கள் சித்தர்தாமும், கொலலாமற் கொல்லுமையா வெளிவிடாதே-கோதையர்களாசையிலேசிக்கிடாதே, பொல்லாத பொருளதுகைக் கொண்டாயானாற் - புகலரிய பிரமலபிதவறிப்போகும், வெல்லாமல் வெல்லுமந்ததீட்சைகண்டால்-வெகுகோடிவித்தையெலாமடலாமே

ஆடலா மப்பதுவு முப்பதாச்சு - தாகரா வுப்பதுவு முப்பூவாச்சு, பிடுலா மதிற்பிறந்த பிண்டமாச்சு - பிண்டத்திலண்டமெனு மமுதமாச்சு, பாடலாம் பாலமுக மதுவேயாச்சு - பகர்மூல மென்னுமோ னாந்துமாச்சு, காடெலாங் காயமெனு மைங்காயந்தைக்-காணுமன் மாவிடர்கள் கலங்கினரோ. (௩௩)

கலங்காம லென்மகனே யன்பாக்கேளு- காயமேறு மைங்காயம் பதனம்பண்ணு, மயங்காதே மவுனமேனு மைங்காயந்தான்- மகத்தான மாசினைத்துக் காதிபீடம், இயங்காமற் சிசாவிலடைத்துக் கொண்டு - தீதிலாப் பேழையிலே பதனம்பண்ணு; வயங்குகின்ற வென்மகனே வாரந்தோறும்-வண்மையாச்சற்குருவைப்பூசிப்பாயே.

பூசிப்பாய் நாடோறும் பூசித்தக்கால்-புகழான மார்க்கமிதனாலாமே, யாசிப்பாய் சித்துகளி லனேகஞ்சித்தா - மறுபத்துநாலுசித்து மிதனாலாடும், நேசிப்பாய் நாதர்கடா மறைத்தவெல்லா- நிலைவரமா வெளியிட்டேன் பண்பாய்பாரு, வாசிப்பா யென்னுடைய நூல்கடோறு - மறைத்தவெல்லாங் குருவாணை வெளிவிடாதே. (௩௫)

வெளியாகச் சொன்னேன்மதி வெண்பாநூறும் - வெகுளாதே குருமுறையுஞ் சொன்னேனன்று, அளியோடை யாயிரமாம் பெருநூல்சொன்னே - னதற்குமிந்த வைந்நூறுங் குருநூலாகும், நளிகடல்சூழ் நானிலத்தோ ரறிந்துய்தற்கு - நயமான முறையனைத்துமிந்நூற்குள்ளே, தெளிவாகச்சொன்னேன் பாராருஞ்சொல்லார்-செப்பரிய சித்தருக்குங் குருநூலாமே. (௩௬)

ஆமேதான் சொல்லுகிறேன் வழலையாதி - யாருக்கும்வெளிவிடா தடக்கம்பண்ணு, பாமேதான் பாலுக்குக் குருவாமோரு - பாலித்த வண்டமதை யெடுத்துக்கொண்டு, காமேதான் கல்வத்திலண்டமிட்டுக் - கருவான வைம்மூல மதனில்விட்டு, வாமேதான்வண்மையுள்ள குழவிகொண்டு - வளமாக விருசாம மாட்டுவாயே. (௩௭)

ஆட்டுவாய் மெழுகாக விருக்கும்பாரு - வையனே மெழுகெடுத்துக் குகைபோற்பண்ணு, தேட்டமா விரவிதனிற் காயவைத்துச்- செயமான குகையெடுத்து வைத்துக்கொள்ளு, கோட்டமிலாப்புலத்தியனே கூறவொண்ணாக் - குருவான முப்பூவைக் கூறக்கேளு, தாட்டிகமாக் குகையெடுத் ததனிலந்தச் - சாற்றரிய முப்பூவைப் போட்டிடாயே. (௩௮)

போட்டிடுவாய்பற்பினிலி னுப்பைப்போட்டாற் - புகழாகவுருகியது மணியாமைந்தா, தேட்டமாக் குகைதனிலே மணியைப்போட்டுத் - தெளிவான மெழுகதனல் வாயைமூடி, மூட்டிடுவாய் குருநூலிம் பதிலேசொன்ன - முறைப்படியே யெருவடுக்கிப் புடத்திற்போடு, மாட்டிடுவாய் கெசபுடத்திற் போட்டாயாகில்-மகத்தான சுன்னமாத மென்சொல்வேனே. (௩௯)

## குருநாலம்பது-மதிவெண்பா-நந்தீசர்நிகண்டு,

என்மகனே குருநூலம் பதினிற்சொன்னே - னெடுத்தமுப்பூபரிபாடை தன்னிற்சொன்னேன், றன்னுநந்தீசர்நிகண்டாமுந்நூற்றிற்-செப்பினுர் சிறிதுசிறி தன்பாயாலும், பன்னருமிந்நூலிற்கைபாகத்தோடு-பண்புடனே சொல்லிவைத்தேன் றிட்சைபாகம், நன்னயமா யிந்நூலில் வாதஞ்சித்தி - நவில்வாதி கட்கிந்நூல்பொய்க்காதன்றே. (சுo)

அறைவரிய குருசன்ன முடிந்துபோச்சு - சையனேபூசித்துத் தரிசிப்பாய்நீ, மறுவறுசீர்க் குமரியெனும் வாலைப்பெண்ணை-வளமாகப்பூசைசெய்து வைத்துக்கொள்ளே, துறையரிந்தவேதாந்த குருவின்வாக்யஞ் - சொல்லாதே கண்மணிநீயே விடக்கல்லைத்தான், மறைபொருளாமெனன்றறு வெளிவிட்டக்கால் - மைந்தனே தலைவெடித்துச் சாவாய்பாரே. (சுக)

## விடக்கல்.

பாராருமிக்கல்லுங் கடுத்தகோவை - பாடினேனீ யாயிரத்திற் செப்பவொன்றுச், சீராரும் விடக்கல்வேதாந்தநூலிற்-செப்பவில்லையொளித்திட்டா ரதனுலேதான், பேராருமகிதலத்தில் வாதமெல்லாம்-பேய்மகனே வீணுகப்பொய்த்துப்போச்சு, நேராகவென்றனூலியம்புங்கல்லை - யினிதாயான்சொன்னூற்போ லெவர்சொல்வாரே.

சொல்லரியவிந்நூ லேந்தாங்காண்டத்திற் - சொல்லிய வக்கருவையெலாஞ் சொல்லக்கேளு, நல்லவொருபற்பினியின் முடிதான்கொண்டு-நற்பணியாம்பாடாண மண்டத்தோடு, சொல்லரிய கல்வத்தி லுன்குமிட்டுச் - சுடரிரத்ன விக்கதினுன் மெழுகாவாட்டு, வல்லமையாவழித்தெடுத்து வில்லைசெய்து-மகத்தான ரவிதனிலே வைத்திடாயே. (சுஉ)

வைத்திடுவாயிரவிதனி லெட்டுச்சாமம் - வண்டையுடன் காயவைத்தெடுத்துக்கொண்டு, புத்தியொடு சிந்தூரத்தின் பட்டைகொண்டு-புகழாகக்கோழியென்ற புடத்தைப்போடே, எய்த்திடாதெழுபுகைபோய் மறையநன்று - விடைவிடாதேவிசிறியாலேவீசு, பத்தியொடுதீயவிந்த பிறகுபார்க்கிற்- பரனருளால் விடசுன்னம் பிறக்குந்தானே. (சுச)

தானென்ற சுன்னத்தை யெடுத்துப்பார்த்தாற்-சந்திரன்போற் சுடர்விட்டுப் பிரகாசிக்கும், மானென்றசுன்னத்திலெடைவிராகன்-

யாட்டிவோய் பனிபோற் றெளிந்துபோகும், வனமறமுன்சொன்ன முறைதானையா - வோரைய மில்லாமலடைச் சரியாக்கொண்டு, கோவெனற சத்தசலங் கல்லிற்போட்டாற் - கொதித்துடனே தெளியுங்கா ணின்னுங்கேளே. (சரு)

## கேசரக்குளிகை.

கேளையா விம்முறையை யெவர்தாஞ்செய்வார்-கோரத்தின்வா லைரசமிசனாற்கட்டும, ஆளையா வறுபத்துநான்குஞ்சித்தி- யண்டசக்கசாகரமுமிசனாற்சித்தி, காளையா கற்பங்களிசனாற்சித்தி - கால கொடு விடமிஃது கண்டுகொள்ளே, மாளுமையா மகத்தானசபக்கெல்லாந்தா-மாண்டிடுமேவிடம்பட்டா லுடனேமாதோ. (சகூ)

மாதர்மய லற்றபுலத்தியனேகேளு - மகிமைமிகுறை விடக்கல்லை நூல்கடோறும், கோசுறுசிச் சித்தரெலா மறைத்துச்சொன்னார்-குணமாக யானதனை வெளியாச்சொன்னேன், ஏதமிலாப்புகழுடைநந் தீசராணை - யினிதாகவறிந்துகொள் மயலுறாதே, ஆகரவாப்பிறை முடித்த வையன்மேனு-ளறைந்திட்ட படியானுமறைந்திட்டேனே.

அறைந்திட்டே னென்றன்மே லாணையாணை - யாருக்குமிம்முறைபைச் சொல்லவேண்டாம், விரைந்திட்டே னிம்முறையின் றீட்சைமார்க்கம்-வேதாந்த மைந்நூற்றைப்பதனம்பண்ணு, கரைந்திட்டே னிந்நூலை வெளியிடாதே - காசியினின் மானிடர்க்குக் காட்டவேண்டாம், திறந்திட்டே னிந்நூலைந் தாங்காண்டத்திற்- றேபத்திற் கிடையாது பதனம்பண்ணே. (சஅ)

பதனமிது வெகுபதன மைஞ்சாங்காண்டம் - படிப்படியாய்ச் சொல்லிவைத்தேன் முப்பூமார்க்கம், அதிநலமா மென்பாடன்மூன்றுலட்சத்-தன்றிமற் றெவற்றிலுமிம் முறையேயில்லை, கதமதொரு சிறிதுமிலாப் பதினெண்பேரும்-கபடமதாச்சொல்லிவைத்தார் நூல்கடோறும், அதிகமிஃதாயிரத்தெட் டண்டத்திற்கு-மதிகமைந்தாங் காண்டமோ வதிகங்காணே. (சகூ)

காண்டகுநற் குணமுடையோ யன்பின்மிக்காய் - கல்வியறி வுடையாய்கண் மணியேகேளாய், மாண்டபுக ழகத்தியன்வாக்கமுதவாக்கா-மாசில்லாயிரத்திலுகி துயிராம்பாரு, வேண்டுமெனில் வேதாந்த சுருக்கம்பாரு - மேதகுமைந்தாங்காண்டச் செய்யுணூற்றில், தோண்டருமோர் நேரியகன்ற குருவைக்கண்டு-குகையில்வந்து சிவயோகத் தவமுண்ணே. (ருo)

## கற்பக்கரு.

கற்பமதுவாதத்தின் குருதானையா - கபடமாவிலைகற்ப மென்றுசொன்னார், அற்பமாமலைகாக தொருநாளேனு- மையையோவுன்னுயிர்தான மாயுங்காணே, கற்பமதுதீட்சைசெய்த வாமப்பாலைக்கண்டுகுரு வென்றுசொல் விப்பணம்போற்கொள்ளு, விற்பனமாகீர்னோர்கண்டலத்துன் - மேன்மைபெறுகாமப்பாற்றீட்சைகொள்ளே.

கொள்ளுமது மண்டலத்திற் பனிநீர்கொள்ளு-கொடுங்காரமெத்தனையா வனுப்போற்கொள்ளு, அன்னையா கற்பங்கா யாதிகொள்ளு-வதன்பின்னர்ப்பஞ் சீகரண முடிவுகாணும், வெள்ளையா வைஞ்சுகற்ப முடிந்தபோச்சு-வெளியிதுவென யெவர்காணப்போகிறார்கள், இல்லையா கோடியுகம் வாழலாகு - நிமிடத்திற்கெவுனத்திற் காணலாமே.

காணப்பாதத்துவங்க டொண்ணூற்றாறும் - கண்மணியேசபையாருங் காண்பாயையா, மாணப்பாவாதமென்ற கருவைக்கண்டால்-வாதபித்தசிலேத்துமத்தை மடித்துக்கொள்வாய், ஏணப்பா வெட்டிரண்டும் பத்துங்காண்பா-இருப்பாரோ கோடியுக மெனைப்போல் வாழ்வார், வேணப்பா வையகத்தின் மாண்பர்கூடி- வேதமென்றசாத்திரத்தை வெளிவிட்டாரே. (௫௪)

விட்டாரோ சித்தர்கடாஞ் சொன்னநூலில் - விவேகத்தால டக்காமல் வேடம்பூண்டார், கெட்டாரோயவர்கொடியமனத்தினாலே-கேடுகெட்ட சண்டாளர் கூட்டங்கூடி, தொட்டாரோ வழலையென்ற வாதியாதி-தொடுத்தாரேசரிவையில்வாழ் பவரையெல்லாம், விட்டாரோ யவர்பொருளைநாசமாக்கி-வெற்றோடுகையிற்கொடுத்துவிடுவார்பாரோ

விடுவார்களவர்மனது நொந்ததனால் - விளங்குவரோ வொருக்ளும் விளங்கார்மேலும், கொடுநோயாங் குட்டமொடு பாண்டுரோகங்-கொண்டலைவா ரென்பதற்கோ ரையமில்லை, கெடுவார்கள் கன்மகாண்டத்திற்சொன்ன-கிரியைகளைச் செய்தாலுமுய்யமாட்டார், படிமீதிற் பொய்வேடம் பூண்டோர்க்கிந்நூல்- பகரவில்லை சிவயோகிக் காகுமன்றே. (௫௫)

## துலாராசி.

யோகிபெற்ற பேர்படைத்தோ னுலகிலைய-வொருகோடி மாந்தர்களிலொருவனுண்டு,தேகிபெற்றபெயராதுதானவற்கேசெல்லுஞ்-

சேடத்திலுள்ள "கூறதவு மவற்கேதோன்றும், சோகமிலா யோகிக ட்கே யிராசிக்கூறு- சொல்லரிய விட்டகுறைபுத்திநட்பம், ஷகிக்கி ற் றுலாராசி செனமக்கூறல் - குதிக்கும்போ தவற்கிவைகள் பூர்வ மாமே. (ருசு)

பூர்வமாமொன்பதற்கு ளெய்தவொண்ணுப் - புகழ்படைத்தபூ ர்வமெஞ் ஞானக்கன்னல், பூர்வக்காய் வயிற்றிலவ னுதிக்குநாளிற்- புகலரிய பராபரத்தைப்"பணிந்தேபோற்றும்," கூர்மையாப் பராப ரனை யன்புகொண்டு - கூறுமனக்கண்ணுலே யொட்டிப்பார்க்கும், சி ர்ரோக்கிற்செயகம்பம் பரத்திநேர்மை - சிவசிவா பாலகற்குத் தெ ரியும்பாரே. (ருஎ)

தெரியும்பார் செயகம்பம் பரத்திநேர்மை - தேனமுதமதனப் பால் சிறந்தேபாயும், அறியவந்தப்பாலகனு மொழிதற்கொண்ணு-வ முதத்தையடுத்துவாய் மடுக்குநாளும், பரிவாக வமுதத்தை யடுத்து ண்டக்காற்-பரிவானை பதினெட்டும பண்பாப்பேசும், துருவமாந் துலாராசி பூர்வஞானந் - தொடர்ந்துவரும் விடாவைய சொன்னேன் பாரே. (ருஅ)

## மச்சரோகைமுதலியன.

சொன்னவொரு பத்துக்கு ணிராதாரத்தின் - சொல்லரியமவு னமையா வபானவாயு, அன்னைமிகவலக்கனுற வுறைந்துதள்ள-வர னருளாற் பாலகனு மவனிமீதில், சொன்னவிக் கிரகம்போல் வந்து தோன்றுந்-துகளறுசீ ரம்மகவின் கருக்கூறைய, என்னென்று சொ ல்லுவன்யா னியம்பவொண்ணு - திடம்வலமா யிரோகையொன் றிரு க்குந்தானே. (ருசு)

தானென்றபாலகற்கு முதுகின்மச்சஞ் - சாற்றுதன ரோகைநெ ற்றி தன்னிற்சுக்ரன், பூனென்ற விருபுறமுஞ் சக்கரந்தான் - புகழ் பெரிய மார்புதனிற் பிறைபோன்மச்சம், வானென்ற வுன்னுக்கின் மவுனரேகை-வளர்பிறைபோற் றுவிருக்கு மைந்தாகேளு, கோனெ ன்ற வமரர்குரு வியாழன்றானுங்-கூறரிய சுக்கிரனும் பார்வையாமே.

ஆமதுகாவனடுநாளி லமுதகெங்கை - பரகாபரத்தினுடைமகி மையாலே, போமதுதா னுன்னுவி லமுதசத்தி - புகழ்பெரியபால னுக்கு மவுநஞ்"சொல்வாள், வாமமிகு வாமிசிவ காமரூபி- மைந்தனு க்கோ ருபதேச மளிப்பாள்பாரு, தேமதுதான் மவன [illegible] தெளிவாகச் சித்திக்கு முன்மைமை [illegible] (...)

சித்திக்குஞ் செகராசி யிதுதானையா - செகத்குருவா லான்சித்த னுவான்பாரு அத்திக்கு மைஞ்சுவய தானுலைய - லன்றன்றோவக த்திசர் மவுநஞ்சொல்வார், முத்திக்கே யருகனும் படிச்செய்திட்டு-மோனநிலைபெறுதற்குமூலஞ்சொல்வேன், பத்திக்கோர்வித்தெனுமீ ரொன்பதின்சித்தர்-பாலிப்பார் தியானத்தாற் சொலிப்பாய்மன்னே.

சொலித்திடவே யோகமொடுஞானஞ்சொல்வார் - சொற்பெரிய யோகசிவ மவுனஞ்சொல்வார், தெலித்திடவே சித்தர்தமக் கடையாளம்பார் - கிருபையுடன் யான்சொன்னே னறிந்துகொள்ளு, பலித்திடவே பரிபாடைத் தியானஞ்சொல்வார் - பஞ்சபட்சிதாமொடுங் குஞ் சவையுஞ்சொல்வார், அநுக்குவிடேல்வழுத்தரிய வாதஞ்சித்தி-யதைசயறியப்பலரிங்கே யலைவாராமே. (௯௩)

## புத்திகெட்டவாதி.

ஆமேயிவ் வையகத்தே மடையர்கூடி - யலைந்தலைந்து சுட்டதிலு லாவதென்ன, போமேதான்புகையெழும்பி மேகம்போலப்-பொருமியேகண்கெட்டுப் போவார்பாரு, வாமேதான் வாய்புலம்பி மடையரெல்லாம் - வாதமது பலிக்குமென்றே பொருள்கடோற்றுச், காமேதான் கடைசரக்கைச் சுட்டுச்சுட்டுக் - கருவறிந்த யோகியைப் போற் கண்கெட்டாரே. (௯௪)

கருவென்னகுருவென்ன விராசியோர்க்குக்-கண்ணாடிமுகம்போலே காணும்பாரு, பருவென்ன திருவென்ன துலாராசிக்குப்- பாத்திரரா மவர்பெருமை சொல்லப்போமோ, புருவென்ன புகழென்ன சொரூபஞ்சித்தி - புகழ்பெரிய விடக்கல்லிற் பலிக்கும்வாதம், வருமென்ன வகையென்ன தொகைதானென்ன - வழுத்தைதந்தாங்காண் டத்து மறைப்பிராதே. (௯௫)

மறையாமற்சொல்லுகிறேன் மைந்தாகேளு-மகத்தான பரிபாடையில்லாமற்றான், குறையாமற்சொல்லுகிறே னன்புகொண்டு-கோடானகோடிவித்தை யினிமேற்பாரு, அறையாமலறையையா யிரத்துச்சொச்ச - மாயிரத்தெட் டிதழப்பா வைஞ்சாங்காண்டத் - துறையிலோர்துறையறிந்துதுருவக்கண்டு, துருவத்தின்மேலேறிக்கருக்கண்டேனே. (௯௬)

## பராபரதிட்சை.

கருவானபொருளையா மூலாதாரங்-கருவறிந்த மூலத்தின்மேலாதாரம், அருளானவருளையா வாதாரத்தை- யறிவாலே யறிந்தெனிராதாரமூலம், குருவானவிருளையா பராபரத்தின் - குணமான வெளியையா நாதவித்து, தருளானதருளையா சபைதானுகுஞ்-சமரசத்தின் மூலமையா வாறுமாச்சே. (௯௭)

## நிராதார தீட்சை.

ஆறுமேமவுனசிவ யோகதீட்சை-யையனே வறைந்திட்டேனு ர்காஞ்சொல்வார், பாறுமேபராபரத்தின் தீட்சையாச்சு-பாடுகிறே னிராதார தீட்சைகேளு, நீறுமேநிராதார மதத்தாந்தீட்சை - நினை வோடுகேட்டிடுவாய் நேர்மையாக, ஆறுமே அகாரமது உகாரங்கொ ண்டே - யரகராயவசிமந அரஓமென்னே. (௬அ)

## நிர்க்குண தீட்சை.

ஓமதுதானிராதார தீட்சையாச்சு - தோகோகோ நிர்குணத்தி ன் தீட்சைகேளு, வாமமது வகாரமுடன் யகாரங்கொண்டு- மாட்டு கிறேன் யவசிமந அரஊமென்று, நாமமது சொன்னே னிர்க்குணத் தின்தீட்சை - நன்றாக முப்பூவின் தீட்சையாகும, நேமமதாநிர்க்கு ணத்தின் தீட்சையாச்சு - நின்மலமாந் தசதீட்சை நேர்மைகேளே,

## நின்மல தீட்சை.

நேர்மையா நின்மலத்தின் தீட்சைதன்னை - நேயமொடு சொல் லுகிறே னினைவாக்கேளு, சீர்மையாஞ் சிகாரத்தி லுகாரந்தானுஞ்- சிமநயவ நீம்றீம்சிங்கென்றேயூன்று, நீர்மையா நின்மலத்தின் தீட் சையாச்சு-நிகழ்ந்தரியசித்தர்களு மிவ்வாறோதார், வார்மையாநின்ம லத்தின்தீட்சைசொன்னேன்- மகத்தானபூரணத்தின்மகிமைகேளே.

## பூரண தீட்சை.

கேளேநீ பூரணத்தின் தீட்சைசொல்வேன் - கேடிலாநாதர்க டாஞ் சப்தகோடி, ஆளேதான்றசதீட்சை பார்த்துத்தேறி-யண்டப கிரண்டநவ கண்டம்பாய்ந்தார், நாளேதா னகாரத்தில் உகாரமேறி- நயவசிம நறீங்ஸ்ரீங்ஓ மென்றேயூன்று, வாளேதான் பூரணத்தின் தீ ட்சையாச்சு - வளமானவாதார தீட்சைபாரே. (எக)

## ஆதார தீட்சை.

பாராயோவாதார தீட்சைசொல்வேன் - பாலகனேயாதாரதீட் சையையா, மாராயோ சிகாரத்தில் உகாரங்காணில் - மநயவசிவங்சி ங்கிறிங்கென்றே யோதாய், ஆராயோ வாதார தீட்சையாச்சு- தண் டசத்தசாகரமு மடங்கிப்போச்சு, ஏராயோர்பேரண்ட வகண்டமட் டு-மேறலாம் வாசிகொண்டு தீட்சைபாரே. (எஉ)

பாரேதானுதார தீட்சையாச்சு - பகருமொரு தீட்சையிஃ தில் லாவிட்டால், ஏரோதான்யோரது முப்பூத்தானு - மெந்தவிதம்பார்த் தாலு மனங்கூடாது, ஊரோதானேராகுமுப்பூத்தானு-முறைத்தாரே யவரவர்க டீட்சைதாமும், சீரானசத்திசிவ தீட்சைதாமுஞ்-செப்பு வதிற்பயனில்லை நூலைப்பாரே. (எங)

நூல்பார்த்துலலாட மதிலேறிப்பார்த்தே - னுவலரிய பரதரிசனத்தைக்கண்டேன், கால்பார்த்தே னதற்கப்பால் வாசிகொண்டு, கருத்தோடுபார்க்கையிலே நிராதாரத்தை, நீல்பார்த்து நிராதாரங்கண்ணைக்கண்டு - கேசரகப்பூசித்தே னப்பாற்கேளு, வால்பார்த்துவாசிசிவ யோகங்கண்டான-மகத்தான நிர்க்குணமே பலிதமாமே. (எச)

பலிதமென்ற நிகண்டையா வைஞ்ஞாங்காண்டம் - பாடினேனிந் நூல்போ லொருநூலில்லை, பலிதமையாயிரத்திருக்கோ ருயிராயிந்தப் - பாதனிலாரறிவா ரிந்நூறனை, நலிதராகுளங்தெளிந்த மேலோரெல்லா-கவிலருஞ்சிரிந்நூலைக் கைக்கொண்டார்கள், வலியமனமடக்கிமேலோர்க்கடிமைசெய்து-மைந்தனேபன்னிரண்டுவருடங்காத்தி.

காத்திருந்தவர்மகிழத் தொண்டுசெய்தாற்- கல்வியறிவதனாலே கண்டுகொண்டு, ஆர்த்தியொடுநீயோன் றன்றுகேட்டே-யன்புடை யமகனென்றே யதிந்தெடுத்துச், சேர்த்தணைத்தைந்நூற்றை யெடுத்துக்காட்டிச்-செய்பாகங்கைபாகஞ் சீர்மையாக, வார்த்தைசொல்லி மெய்ம்மொழியை யுபதேசித்து - வைத்திருப்பார் பக்கத்தின் மனமொன்றுமே. (எசு)

ஆமேகேள் முன்சொன்ன கருநாணைய - வறிவாச்சு தின்றுநீ சொல்லக்கேளு, காமேதான்கனைத்திறுத்த சலத்தைமென்றன் - கண்மணியேபத்துமுறை வழுதசத்தி, பாமேதான் பாலமுதம் போலே காணும்-பாலகனேயமுதத்தை யெடுத்துக்கொண்டு, வாமேதானடுப் பேற்றித்தீயைமூட்டி-மைந்தனேகாயவைப்பாய்சாமந்தானே. (எஎ)

சாமந்தான் காயவைத் திறக்கிப்பார்த்தாற்-சாற்றரிதாய்க்குழம் பதுபோ லிருக்கும்பாரு, சேமமதாச்சுத்தசலந் தன்னைவார்த்துத்-தெளியவைத்தால் முத்துப்போற் றெளிந்துகாணும், காமமதா யிரவிதனிற் காயவைப்பாய் - கசிவெல்லாம் போய்ச்சிவந்து காட்டுமீண்டும், பாமமாப்பத்துமுறை ரவியிற்காய்ந்தாற்- படருமையா வெள்ளைக்கல் லுப்பதாமே. (எஅ)

## வெண்சாரை உப்பு.

ஒப்பிலாவுப்பதுவும் பிட்டுப்போலா - மோகோகோ வெழும்புமையா சாரைபோல, வெப்பானவுப்பதுவுஞ் சிறுஞ்சிறும்-வெண்சாரையிதற்குப்பேர் மிடம்பொல்லாது, தப்பிலாவுப்பினிற மென்னசொல்வேன்-தவளநிறச்சந்திரன்போ லொளிருமையா, செப்பரியசிவவுப்பென் றிதற்குப்பேராஞ்- சிரானபராபரத்தைத் தியானஞ்செய்யே

## பரபூசைமுதலியன.

செய்துபரபூசைகூறு பூசைமேலாஞ் - சிற்பரியா மனோவுரிவா லிபூசை, எய்தரியச்சத்திசிவ பூசைசெய்தே - யேசிலண்ட வுப்பெரித் தடக்கமபண்ணு, மெய்யிதுவாஞ்சொல்லிவிட்டே னொளிக்கவில்லை - வேதாந்த சற்குருதன் பாதத்தாணை, சைவரவே வெளியிட்டுச்சொ ன்னேனென்று - நாதர்கள்வெஞ்சாபமதைநாட்டினூரே. (அ௰)

நாட்டினூர்சாபமதைப் பதினெண்சித்தர் - நவிலரியநற்றவத்து முனிவர்சாபம், மூட்டினூர்சதகோடி சித்தர்சாப - மொழிந்தனரிக்நூ ற்கந்தச்சாபந்தன்னை, விட்டிடுதற் கவரோடே யெதிர்ந்தியானுமி - விளம்பரியபரனருளா லிவிர்த்திசெய்தேன், காட்டினே னிந்நூலை வெளிவிட்டார்கள் - காசினியிற் கழுதையாய்ச் சனிப்பாராமால். ()

ஆமேதா னின்னுமொரு கருவைக்கேளு - வாகாயநாதசத்தி யு ப்பையன்பா, நாமேவச்சொல்லுகிறேனு நூபி - நாகாந்தசிரோமணி யின் கூற்றைநன்று, வாமேகாள் மறைலப்பெண் சோலைக்கன்னி-வ ழுத்தரிய பத்துவயசானதன்னி, தேமேவுதேசிமா மிவடன்பேச்சு - சிவனுடனே கூடியிவ யாடினாளே. (அ௨)

ஆடினாளன்புடனே தேவதாசி - யமுதமென்ற நாதவிந்திற் கூ டினுள்பார், பாடினாள்பனியென்ற விந்திற்சேர்ந்தாள்-பளிச்சென்று தெளிந்தெழுந்தாள் பரத்தின்றேசி, சாடினாளவள்சென்று விந்திற் சேரச்- சலவடிவாங்கங்கையது பொங்கும்பாரு, வாடினுடெளிந்தத ண்ணீ ரமுதமாச்சு - மகத்தானதேசிநீ ரென்றம்பாரே. (அ௩)

பேரான வச்சலந்தான் தெளிந்ததானுற் - பேசுதற்கு நாவெ ழுமோயாவர்க்கேனும், வீரான விரியையா லூசிகொண்டு-விட்டக்கா லச்சலந்தான் றெளிந்துபோகும், ஆரானவூசிநீ ரமுதமாச்சு- தன்ற ன்றே தெளிவாச்சு தமுரியாச்சு, காரான வொன்றனக்கோ ரிரட் டிப்பாச்சு - கன்னியென்ற லூசிநீ ரிதற்குப்பேரே. (அச)

இதுவன்றே வெண்மைசிறக் கிளிஞ்சிலண்ட-மிதிலுடையவிந் தெடுத்து நாதத்துட்டி, அதியான வண்டமையா லிரண்டாம்வைப் பா, மதிலுடைய விந்துநீர் கிளிஞ்சினீராம் - மதியுடைய வஞ்சியிவ ளோசைக்காரி-மயக்கினளென்றனையு மயக்கினேன்யான், பதியான கிரியென்றூர் கிரிதானன்று - பகர்கிரியி லமர்தேசி யண்டமாமே. ()

## தேசிநீர்.

தேசியென்றூற் றேசியன்றத் தேசியண்டத் - தேசியிவள்ளுடி யிருப்பு மூன்றும்வைப்பு, பாசியென்றூற் பாசியன்று பாசியண்டம்- பகராத பொருளையா நாலாமவைப்பு, வாசியென்றூல் வாசியனறாசி நீர்தான்-மகத்தான வண்டமையா லைஞ்சாம்வைபபு, வேசியென்றூல் வேசியன்று குமரியானுண்-மேலான வண்டமையா வாறும்வைப்பே.

வைப்பான வைப்பொன்றுந் தப்போவில்லை - வயிரமாமுயினொயா வுரைக்கப்போமோ, உப்பான வுரோமஙீ ரப்பினண்ட - முடன்சேர்ந்த கருவையா வேழாம்வைப்பு, செப்பரிய பொருளிதையார்செப்பவல்லார் - செயமான குருவிறுதா னெட்டாம் வைப்பே, அப்பா வைப்பதையு மறிந்துகொள்ளு-வடங்காதவண்டமையா குருநீராமே.

## கம்பியுப்புப்பாறையுப்பு.

குருவான குருத்திரண் டொன்பதற்குட் - குருநீரைவாங்கியே யுத்திசெய்தால், அருவான கருத்திரண்டு கம்பியாச்சு - தருற்கடியிற் பாறையெனும பொருடானுச்சு, பருவமொரு பத்துக்குட் பருவப்பெண்ணின் - பாலியத்தை யென்னாலே சொல்லப்போமோ, மருவான மங்கைப்பெண் பெற்றவண்ட - மகத்தான வொன்பதற்குட் பத்துமாச்சே. (௮௮)

ஆச்சுதுபா ரண்டத்தி னமுரிகெங்கை - யடங்காதவச்சலத்தாலமுதசுத்தி, பேச்சிதுபார் பேசாத கருவையெல்லாம் - பேசிவைத்தே னெங்நூற்றிற் பெருமையாக, வாச்சுதுபார்மகத்தான பொருளையெல்லா - மாட்டினேன் புலத்தியனே யறிந்துகொள்ளு, ஒச்சதுபார் முறைதவரு தின்னுஞ்சொன்னே - னுனக்கெய்து மெய்தரியமுத்திரானே. (௮௯)

முத்தியென்ற வாரேதோ வெனக்குச்சொல்லு - முத்தியென்றசத்தியாம்வாலைப்பெண்டான், பத்தியென்ற பத்தியது சித்திகோடி-பகரார்களுகர்கடாம் பண்பாத்தாலும், பத்தியென்ற வாரேதோ வெனக்குச்சொல்லும் - பராசத்திமகிமையது பச்சைவன்னம், அத்தியென்று வத்தியலீகார்தாஞ்சொல்வா - ரடிமுடியினுள்ளிருந்த வாலையாமே. (௯௰)

ஆலையென்றவாறேது சொல்விரையா - வாலையென்ற ரசமது தான் விந்துபாரு, ஆலையென்றாலாலையது மதுத்தயாலை - யப்பெரியயாலைதலை யார்தாம்வெல்வார், ஆலையென்ற வாறதனைச் சொல்விரையா-வரிவைவிந்து நாதமதி லைஞ்சாஞ்சுத்தி, சோலையென்றசோலையலீதண்டவேர்தான் - சொல்லாதமவுனமது சொல்லக்கேளே. ()

## சல்லிவேர்.

கேளென்னச் சிடன்மகிழ்ந் தெனையாவென்று - கேட்டதினற் கோனென்றும் பரனென்றும்பார், நாளென்றுநானறிந்தவணுஞ்சொல்லக்கே - ளுமென்றவிந்துதான் விருட்சமாகும், சூளென்றசொல்லதுதான்சொல்வீரையா-தகளிலாச்சோதியேயாதியாகும், வேளென்றவேளால விவரந்தன்னை-விளம்புகிறேன்சல்லிவேரென்றுபேரே·

பேரானபோதுதா னண்டப்பேராம்-பேசுதற்கு நாவெழுமோ பேசார்பேசார், சீரானசோறதுதான் மதனச்சோறு - செப்பரிய சோதிமா வேர்தான்சோறு, ஆரானவா றதுதானண்டவாறு-மாயிரத் தெட் டண்டமட்டு மளாவும்பாரு, நீரானசாறதுதா வண்டச்சாறு-நிகழ்த்துசல் லியமெனுமோர் கொல்லிவேரே. (௯௩)

## கொல்லிவேர்.

கொல்லும்வேர் வெல்லும்வே ரென்றுபேராங் - கூறுமொருச ல்லியமா மரத்தின்வேரு, கல்லும்வேர் புல்லும்வே ரண்டவேரு-கரு விருந்தவண்டவே ரிதற்குப்பேராம், சொல்லும்வேர் நில்லும்வேரெ ன்றுபேராஞ் - சொற்பெரிய கல்லுப்பென் றிதற்குப்பேராம், அல் லும்வேர்வெல்லும்வேர் குருவின்வேரோ - டண்டத்தின் மரமென் று மிதற்குப்பேரே. (௯௪)

மரமென்று லென்னமரஞ் சொல்வீரையா - மகத்தான வண்ட த்தின் மரந்தானையா, வரமென்றுலென்னவரஞ் சொல்வீரையா-வழ லையென்ற வாலைரசமரந்தான்பாராய், சரமென்றுலென்னசரஞ்சொ ல்வீரையா - சாற்றரியசல்லிவேர்ச் சரந்தானையா, அரமென்றுலென் னவரஞ் சொல்வீரையா - வகண்டமென்ற வகண்டத்தின் வரத்தின் பேரே. (௯௫)

பேரான பெயர்களெல்லாம் வெளியதாகப் - பேசினேன்புலத் திய வைஞ்சாங்காண்டத்தில், பாரறிய பதினெண்பேர் மறைப்பை யெல்லாம் - பகல்போலே விளக்கிவிட்டேன் பண்பாப்பாரு, சீராக வெவர்களிவ் வண்ணஞ்சொன்னர் - சீர்தூக்கிப் பார்க்கினீலையானே வைய, ஆரானவரைகுறைக ளற்றுப்போக - வாதிதொட் டந்தமட்டு மறைந்திட்டேனே. (௯௬)

அறைந்திட்டே னிந்நூலை வெளிவிட்டோர்க ளண்டவிடி வி ழுந்துதலை தெறித்துப்போவார், குறைந்துமதி குருமொழியை வெ ளிவிட்டக்காற் - கோடியிடி யவர்தலையில் விழும்ந்தேப்பார், சிறந்த புகழ்ச் சதகோடி ரிஷிகள்சாபஞ்-செகற்குருவின்சாபமது வந்துசாரு ம், மறிந்தோடச்சாபங்க ளனைத்துந்தீர்த்தேன்-மகத்தானவைந்நூற் றை யடக்கம்பண்ணே. (௯௭)

பண்ணப்பா பராபரத்தின் கிருபையாலே - பாசித்தே னனைத் திலுக்கும் பெயருஞ்சொன்னேன், கண்ணப்பா கண்மணியே சாற்ற

வொண்ணுங் - கருவெல்லாமுனக்குக் கருத்தாச்சொன்னேன், விண்ணப்பா விண்ணுக்குண் மணியேயென்றன் - வேதாந்தசித்தருக்குள் விளங்கும்வாழ்வே, நன்னைப்பாகாதாக்கப்பொருளைப்போற்று - நயமாகவெங்குருவு முரைத்தார்காணே. (௯அ)

காணவென்று னெடுத்தார மென்றேவாடிக் - கலங்காதேயென் மகனேகருவைக்கண்டு, மாணவென்றுனல்லவழியிதென்றேகி - கமத்தான வண்டசார சாங்கமெல்லாம், காணவேகண்டு தெளிந்திடுதிமாறுக் - கருணைமொழி யெங்குருவாங் குமரவேளும், யாணர்நிறையாதியந்த மிதுவேயென்று - மண்டசத்தசாகரமு மிதுவென்றாரே. ()

இதுவன்றோ வண்டபகிரண்டமென்று - மிதமானவண்டம்பேரண்டமென்றும், பதியென்ற பரமென்மறையைஞ்சாங்காண்டம் - பகருகின்றபேரண்டப் பதியாமென்றும், மதியொடுசேர் மவுனவண்டமிதுவேயென்று - மகத்தானவெங்குருவுமுபதேசித்தார், சதுர்பெருசற்குணநிதியே யறிந்துவாழ்ந்தி - சாற்றுபரிபாடைமுற்று முற்றிற்றன்றே. (௱)

அகத்தியமுனிவர்

அருளிச்செய்த

# பரிபாஷைத்திரட்டு




[ஐ]ந்தாங்காண்டம்.

[மு]ற்றிற்று.



---

